# மண்ணின் குரல்

கனடாவில் 1987இல் வெளியான முதலாவது தமிழ் நாவல்

வ.ந. கிரிதரன்



தலைப்பு : மண்ணின் குரல் **Mannin Kural**

ஆசிரியர் : வ.ந.கிரிதரன் ( V.N.Giritharan)

மொழி : தமிழ் (Tamil)

பதிப்பு : இரண்டாம் மின்னூற் பதிப்பு மே 2025 Second e-book edition

முதற் பதிப்பு: மங்கை பதிப்பகம் , கனடா 4.1.1987 (Mangai Pathippakam,Canada)

முதற் பதிப்பு அட்டைப்படம்: பாலேந்திரா. (First Edition Cover Design - Balendra)



பதிப்பாளர் : பதிவுகள்.காம் (Pathivukal.Com)

வாட்ஸ்அப் : +1 647 785 3760

மின்னஞ்சல் : girinav@gmail.com

நூல் வடிவமைப்பு : வ.ந.கிரிதரன் & செயற்கைத் தொழில் நுட்பம் (AI)

# உள்ளே



1984 இல் 'மான்ரியா'லிலிருந்து வெளியான 'புரட்சிப்பாதை' கையெழுத்துச் சஞ்சிகையில் வெளியான நாவல் 'மண்ணின் குரல்'. 'புரட்சிப்பாதை' தமிழீழ மக்கள் விடுதலைக் கழகக் கனடாக் கிளையினரால் வெளியிடப்பட்ட கையெழுத்துச் சஞ்சிகை. நாவல் முடிவதற்குள் 'புரட்சிப்பாதை' நின்று விடவே, மங்கை பதிப்பக (கனடா) வெளியீடாக ஜனவரி 1987இல் கவிதைகள், கட்டுரைகள் அடங்கிய தொகுப்பாக இந்நாவல் வெளியானது. இதுவே கனடாவில் வெளியான முதலாவது தமிழ் நாவல். அன்றைய எம் உணர்வுகளை வெளிப்படுத்தும் நாவல். இந்நூலின் அட்டைப்பட ஓவியத்தை (மேலுள்ள) வரைந்தவர் கட்டடக்கலைஞர் பாலேந்திரா. மேலும் இந்நாவல் 'மண்ணின் குரல்' என்னும் தொகுப்பாகத் தமிழகத்தில் 'குமரன் பப்ளிஷர்ஸ்' வெளியீடாக வெளிவந்த நான்கு நாவல்களின் தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளது. -

# அத்தியாயம் ஒன்று: கமலா டீச்சர்!



*(புரட்சிப்பாதை கையெழுத்துச் சஞ்சிகையில் வெளியானபோது.)*

மாரி தொடங்கிவிட்டதால் கடந்த இரு மாதங்களாகவே மப்பும் மந்தாரமாகத்தான் வானம் இருண்டு கிடக்கின்றது. தமிழரின் வாழ்வைப்போல், வேளைக்கே இருண்டுவிடும் பொழுதுகளில், கும்மிருளைக் கிழித்தபடி கவசவாகனங்கள் விரைவதும், கொள்ளிவாற் பிசாசுகளால் கிராமங்கள் எரிவதும்.ஆதிகாலத்தில் ‘கொள்ளிவாற் பிசாசுகளை சேற்றிலுருவாகும் வாயு ஒன்றின் விளைவே என்பதனை அறியாத மானுடர்கள் மருண்டு திரிந்தார்கள். இன்றும் 'கொள்ளிவாற் பிசாசுகளின் நடமாட்டம் தமிழீழமெங்கனுமே அதிகமாகத்தான் இருக்கின்றது.ஆமாம். இவையும் ஒருவிதச் சேற்றில்தான் உருவாகின்றன.இனவாதச்சேற்றில் உருவான 'கொள்ளிவாற் பிசாசுகள் இவை, விரைவாக வீடுசேரும் அவசரத்தில் கமலா, வயல் வெளிகளினூடே நீண்டிருக்கும் அச்சாலையில் தனிமையில் வந்து கொண்டிருந்தாள். இலேசாக இருண்டுவிட்டது. மழை வேறு மெல்லிய தூறலாக துமித்தபடி இருந்தது.ஏதோ ஒருவிதச் சோகத்தில் ஆழ்ந்திருப்பதைப்போல் பனை மரங்களெல்லாம் மௌனித்துக் கிடக்கின்றன. வழக்கமாக ஒருவித ஆனந்தத்தில் எக்காளமிடும் தவளைகள் கூட சுருதிகுறைத்து சோககீதம் இசைத்தபடி இருக்கின்றன.

கமலா ஒரு நடுத்தரவர்க்கத்தைச் சேர்ந்த இளமாது. வட்டுக்கோட்டையிலுள்ள பாடசாலை ஒன்றில் ஆசிரியையாகக் கடமையாற்றுகிறாள். அவளது தந்தையும் ஒரு தமிழாசிரியரே! அவளிற்கடுத்து மூன்று சகோதரிகளும், ஒரு சகோதரனும் இருக்கின்றார்கள். அவளிற்கு பல்கலைக்கழகம் செல்லும் வாய்ப்புக் கிடைத்தது. ஆனால் குடும்பநிலைமை காரணமாக கிடைத்த ஆசிரியை வேலையை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டாள். அவளிற்கடுத்த இரு சகோதரிகளும் பல்கலைக்கழகத்தில் பயின்று கொண்டிருக்கிறார்கள். இளவயதிலேயே தாயை இழந்து விட்ட குடும்பத்தில் அவளே தாயாக, தமக்கையாக விளங்கினாள். கடைசித் தங்கையும், தம்பியும் பல்கலைக்கழக புகுமுக வகுப்பில் கல்வி பயின்று கொண்டிருக்கின்றார்கள்.

இனரீதியாக அடக்குமுறைகளுக்குள்ளாகும் இனத்திற்காக பொங்கும் அவள், சமுதாயத்தில் பெண்கள் இன்னும் அடிமையாக இருப்பதை எண்ணிச் சீறுவாள். குடும்பம் என்னும் புனிதமான பிணைப்பு நிலவ வேண்டுமானால் பெண்ணிற்கு மட்டுமல்ல, ஆணிற்கும் கற்பு அவசியமெனப் பட்டிமன்றங்களில் அடிக்கடி வாதாடிக்கொண்டவள்; கொண்டிருப்பவள். 'கற்பு என்பதனை காரணங்காட்டி பெண்களை அடிமைகளாக

வைத்திருக்கும் ஈனச்செயலை எதிர்த்தாளே தவிர கற்பின் அவசியத்தை அவள் மறுக்கவில்லை. அது ஆணிற்கும் அவசியமென்ற பாரதியின் கொள்கையில் ஊறியவள் அவள். கல்யாணம் என்ற பெயரில் பெண்களை விற்கும் ஈனச்செயலை கடுமையாகக் கண்டிப்பவள்.

அவளது வாழ்விலும் அவளது மனதிற்கேயுரியதொரு இனிமை இருக்கத்தான் செய்தது; அவளது இலட்சியங்களுக்கேற்றதொரு வீரனாக, ஈஸ்வரன் இருந்தான். அநீதிகளுக்கு, அக்கிரமங்களுக்கெதிராகச் சீறி யெழுந்த அவனது வாழ்வு 'காடுகளிலும், குகைகளிலும் தனித்த இரவுகளிலும் தொடர்ந்து கொண்டிருக்கின்றது. அவன் ஒரு 'விடுதலைப்போராளி' அவன் தலைமறைவாகி ஒரு வருடத்திற்கும் மேலாகி விட்டபோதும் இன்றுவரை அவள் அவனைச் சந்திக்கவில்லை. கடைசியாக அவன் கூறிய சொற்கள் இன்றும், சற்று முன்னால்தான் கூறியது போல் பசுமையாக எதிரொலித்த வண்ணம் இருக்கின்றது.

கமலா! சிலவேளைகளில் இதுவே எமது கடைசிச் சந்திப்பாகக் கூட இருக்கலாம்; அநீதிகளுக்கு, அக்கிரமங்களுக் கெதிரான "புரட்சிப் பாதையில் காதல், குடும்பம் என்பவற்றின் முக்கியத்துவம் குறைந்து விடுகின்றதேயொழிய, காதல் மறைவதில்லை; என் வாழ்வின் உந்து சக்தியாக என் இறுதி மூச்சுவரை உனது நினைவுகள் தொடர்ந்து வரும். ஒருவேளை புரட்சி வேள்வித்தீயில் எனதுடல் வெந்து போகுமாயின் அதற்காகக் கலக்கமடையாதே! உன் காதலன் புனிதமானதொரு இலட்சியத்திற்காகப் போராடியவனென்று பெருமைப்படு".

அன்றிலிருந்து அவளைப் பொறுத்தவரையில் அவள் இருவகைப்பட்ட வாழ்வு வாழத்தொடங்கினாள்; எண்ணத்தில் ஈஸ்வரனின் நினைவுகளுடன் மானசீகமானதொரு வாழ்வு வாழ்ந்துகொண்டிருந்த அதேசமயம் நிஜவாழ்விலோ குடும்பத்தின் பொறுப்புகளைத் தாங்குமொரு சுமைதாங்கியாக மாறிவிட்டிருந்தாள். மெதுவாக துமித்துக்கொண்டிருந்த தூறல் சிறிது பெருக்கத் தொடங்கிவிட்டிருந்தது. விரைவில் நடையைப் போட்டாள். கண்ணுக்கெட்டியதுரம் வரை ஆள் அரவமேயற்று மயான

அமைதியிலே அவ்வயற் பிரதேசம் மூழ்கிக்கிடக்கின்றது. வழக்கமாக பஸ்ஸில்தான் அவள் வீடு செல்வது வழக்கம்; ஆனால் அன்று பஸ் எதுவும் வந்த பாடாய் இல்லை. அடிக்கடி பஸ்கள் நிற்பதும், வீதிகளில் பிணங்கள் மிதப்பதும் சாதாரண காட்சிகளாகிவிட்டன. "பாவம் அப்பா கவலைப்படப்போகிறார்", அவளில்லை யென்றால் வீட்டில் எதுவுமே ஓடாது. இதுவரையில் பயிர்களிற்குள் அமைதியாக இரை தேடிக்கொண்டிருந்த "ஆட்காட்டி"க் குருவியொன்று திடிரெனச் சத்தமிட்டபடி பறக்கின்றது. "ஆட்காட்டிக் குருவி"கள் மிருகங்களின் தோழர்களாகக் கருதப்படுபவை.காடுகளில் வேட்டைக்காரர்களைக் கண்டவுடன் சத்தமிட்டு மிருகங்களைக் காப்பாற்றுவதால் வந்த பெயர்தான் 'ஆட்காட்டியென்று கர்ணபரம்பரைக் கதையொன்று உண்டு. ஆட்காட்டியைத் தொடர்ந்து தந்திக்கம்பம் ஒன்றில் நெடுநேரமாக நின்றிருந்த நீண்ட இரட்டைவாற் கரிக்குருவியொன்றும், காற்றுவெளியில் வட்டமிட்டுக் கொண்டிருந்த 'ஊர் உலாத்தி'க்குருவிகளும் எங்கோ கடுகி மறைந்தன. இதுவரை மெளனித்துக் கிடந்த பனைகளிற்கிடையில் மெல்லியதொரு சலனம் கருவானைக் கோடுகிழித்தபடி மின்னலொன்று ஓடி மறைந்தது.

'மின்னல் மீண்டும் ஈஸ்வரனை நினைவில் கொண்டுவந்து நிறுத்தியது. அவன் அடிக்கடி சொல்வான்;

"கமலா, ஈழத்து முற்போக்குத் தமிழ்க் கவிஞரொருவரின் கவிதையொன்றுதான் இந்த மின்னலைக் கண்டதும் ஞாபகம் வருகின்றது. மின்னலின் வாழ்வோ கணப்பொழுது: அக்கணப் பொழுதினுள் அது ஒளிவீசி மறைகின்றது. மனிதவாழ்வும்

இத்தகையதாயிருக்க வேண்டும். ஒரு கணப்பொழுதே வாழ்ந்தாலும் பிரயோசனமாகப் பயனுள்ள வாழ்வு வாழவேண்டும்.

ஏதோ தொலைவில் இரையும் சத்தம் கேட்கிறது. பஸ்தான் வருகின்றதோ..? திரும்பிப் பார்த்தவளின் கண்களில், தொலைவில் மெல்லிருளைக் கிழித்தபடி வந்துகொண்டிருக்கும் இராணுவக் கவச வாகனங்கள் தெரிகின்றன.

# அத்தியாயம் இரண்டு: குரங்கின் கையில் அகப்பட்ட பூமாலை.



*(புரட்சிப்பாதை கையெழுத்துச் சஞ்சிகையில் வெளியானபோது.)-*

மெல்லியதொரு அதிகாலைப் பொழுது; முன்பனிக் காலக்குளிர்மையில் காலை குளித்துக் கொண்டிருந்தது; பனித் துளிகளைத் தாங்கி நின்ற புற்கள் மெல்லிய தென்றலில் சிலிர்த்து நின்றன; கீழ்வானத்தே சிவப்பு கவியத் தொடங்கி விட்டிருந்தது; கிராமத்துச் சேவல்கள் ஆரம்பித்து வைத்த கச்சேரியில், காகங்களும், காகங்களைத் தொடர்ந்து கிளிகளும், தேன்சிட்டுக்களும் அணில்களும் கலந்துகொண்டிருந்தன. வெகுதொலைவில் விண்ணில் நிரை நிரையாக நீர்க்காகங்கள் காக்கைத்தீவுக் கடலைநோக்கி கோடுகிழித்துக் கொண்டிருந்தன.

அந்த மெல்லிய காலையின் எழிலை இடைக்கிடை மின்னல் வேகத்தில் விரைந்து கொண்டிருந்த இராணுவ, பொலிஸ் அல்லது கடற்படையினரின் வாகனங்கள் குலைத்துக்கொண்டிருந்தன.

வயல்களிற்கு நடுவில், நீண்டிருந்த மெல்லிய செம்மண் பாதையில் விரைந்து கொண்டிருந்தான் அநபாயன். அந்தக் கிராமத்தில் பாற்காரி செல்லம்மாவைத் தெரியாதவர்கள் யாருமில்லை; அவளது கணவர் தம்பிமுத்து வாத்தியார் இறந்ததிலிருந்து, அப்பொழுது அநபாயன் ஒரு வயதுக்குழந்தை - ஒரே குழந்தையுடன் வயலையும் பார்த்துக்கொண்டு, கிராமத்தவர்க்கு பாலையும் விற்றுக்கொண்டு வாழ்க்கையை நடத்தி ஓர் டாக்டராக அல்லது 'எஞ்சினியராகப் பார்க்கவேண்டுமென்பதே; அந்த ஆசையும் கடந்த சில காலமாக அவியத் தொடங்கிவிட்டது: பயங்கரவாதத் தடைச் சட்டம் என்ற பெயரில் இராணுவத்தினரின் அட்டூழியங்கள் அதிகரிக்க அதிகரிக்க மடியில் நெருப்பைக் கட்டிக்கொண்டு வாழ்வதைப்போல் வாழ்ந்து கொண்டிருந்தாள்; அவளது ஒரே பற்றுக்கோடு இந்த வாழ்கையிலிருக்குமென்றதால் அது 'அநபாயன் ஒருவன்தான். யாழ் இந்துக் கல்லூரியில் பல்கலைக் கழக புகுமுக வகுப்பில் அவன் கல்வி பயின்று கொண்டிருந்தான்.

அதிகாலைக் கூதற்காற்று, உடம்பைச் சிலிர்க்க வைத்தது; அநபாயனின் சிந்தனை ஒரு கணம் கலைந்து மீண்டும் குவிந்தது; அவனது சிந்தனை முழுவதுமே அண்மைக் காலமாகவே அதிகரித்து விட்டிருந்த இராணுவ அட்டூழியங் களிலேயே இருந்தது; கண்ட இடத்தில் நாய்களைச் சுடுவதுபோல்.. ....உயிர்களிற்கு மதிப்பே அற்றவொரு வாழ்வில்..... ஒரே இனமிருகங்கள் கூட தங்களிற்கிடையில் ஒருசில பாலுணர்வு வேட்கைகள் தவிர, மோதிக் கொள்வதில்லை; ஆறறிவு படைத்த மனிதர் மட்டும் வர்க்க, மத, மொழி, நாடு ரீதியாகப் பிளவுபட்டுக் கிடக்கின்ற அதேநேரம், மனித இனத்தையே அழிவுப்பாதைக்கு இட்டுச் செல்கிறார்; ஏன்?.

அவன் பால் கொடுப்பதற்காகச் செல்லும் போஸ்ட் மாஸ்டர் வீட்டிற்கோ, அல்லது கந்தர் வாத்தியார் வீட்டிற்கோ, J.P.யார் மயில்வாகனத்தார் வீட்டிற்கோ வீதி வழியாகப் போவதானால் விரைவாகப் போய்விடலாம். ஆனால் அவன் வயல்களிற்கு மத்தியில் செல்லும் பாதையைத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணமே. இராணுவத்தினரின் கெடுபிடிதான். எந்த விதப் பயனுமற்று, வாழ்வை வீணாக்க அவனிற்கு விருப்பமில்லை; நான் பிறந்து வளர்ந்த இந்த மண்ணில். காலையின் எழிலை, அல்லது மாலையின் மஞ்சள் ஒயிலை ரசிப்பதற்குக் கூட எனக்குச் சுதந்திரமில்லை; வீதியில் ஆடிப்பாடி ஓடிட எனக்கு உரிமையில்லை. இது என்ன வாழ்வு.பயந்து. தன்மானம் சுயகௌரவமற்ற அடிமைத்தனமான வாழ்வு. எத்தனை காலம் தான் பொறுத்து மாய்ந்து கிடப்பது.?

சிந்தனையில் மூழ்கி விரைந்து கொண்டிருந்த அநபாயனின் கவனத்தை, வயலின் நடுவினில் புதர்கள் மண்டித் தென்னைகளுடன் தெரிந்துகொண்டிருந்த அந்த நிலப்பரப்பும், அதனைச் சுற்றி வட்டமிட்டுக் கரைந்து கொண்டிருந்த காகங்களும் கவர்ந்திழுத்தன; காகங்கள் கரைந்து கொண்டிருப்பதனால் ஏதாவது காரணமில்லாமலிருக்காது. மெல்லியதொரு திகிலுடன் கூடிய உணர்வு அவன் நெஞ்சினைப் பற்றிப்படர்ந்தது.

பாதையின் ஓரத்தே நின்ற பூவரச மரமொன்றில் சைக்கிளைச் சாய்த்து வைத்துவிட்டு; மெல்ல வயலினுள் இறங்கியவன், புதர் மண்டிக் கிடந்த அந்தத் திட்டை நோக்கி நடந்தான்; மனித நடமாட்டத்தையுணர்ந்த காகங்கள் சற்றுத் தள்ளிப்போய் நின்று கத்தத் தொடங்கின. பதரை நெருங்க நெருங்க அநபாயனின் நெஞ்சிலும் வேகம் அதிகரித்தது.

காகங்கள் கரைந்த திக்கை நோக்கிச் சென்றவனின் பார்வையில் அந்தச் சிவந்த உடல்பட்டது; அது ஒரு பெண்ணின் உடல், ஆடைகள் எதுவுமற்ற நிலையில், முகங்குப்புற குடங்கிக் கிடந்த உடலில் ஆங்காங்கே சிகரட் சுட்டதாலான காயங்கள் கன்றிக் கிடந்தன; தோள்கள், முதுகு, தொடைகள், கால்கள் எல்லாம் காயங்களும், நகக்காயங்களும், சிகரட் வடுக்களுமாக காட்சியளித்தன;

அநபாயன் மிகுந்த மனோதிடம் வாய்ந்தவன்; தம்பிமுத்து வாத்தியின் உறுதியான உடம்பும் செல்லம்மாவின் மனோதிடமும் கலந்துருவான அவன் எதனையும், எத்தகைய சந்தர்ப்பத்திலும் மன உறுதியுடன் எதிர்கொள்பவன்; குரங்கின் கையில் அகப்பட்ட பூமாலையெனக் குலைந்து கிடந்த அந்த உடலை தனது சேர்ட்டைக் கழட்டி இயலுமானவரை மறைத்துவிட்டு, மெல்லத் தலையைத் திருப்பியபோது அவனது மன உறுதியும் குலைந்து, "கமலா டீச்சர்" என்று அலறியே விட்டான்; ஏதோ சந்தேகம் வரப்பெற்றவனாக கமலா டீச்சரின் நாடித்துடிப்பைப் பரீட்சித்துப் பார்த்தவனின் நெஞ்சில் சிறிது தென்பு படர்ந்தது; கமலாடீச்சர் செத்துவிடவில்லை. நாடி துடித்துக் கொண்டுதானிருந்தது.

அடுத்த சில நிமிடங்களில், வாயுவேகம் மனோவேகம் என்பார்களே அந்த விதத்தில் காரியங்கள் நடந்தன; கார்க்காரச் சண்முகத்தின் வீடு அருகில் தானிருந்தது; அவனது காரில் கமலாடீச்சரை யாழ் பெரியாஸ்பத்திரியில் சேர்த்து விட்டுத் திரும்பிய போதுதான்,

அவனிற்குக் கமலாடீச்சரின் குடும்ப ஞாபகம் வந்தது; ஆனால் அதற்கிடையில் கிராமம் முழுக்க செய்தி வெகு வேகமாகப் பரவிவிட்டது. கமலா டீச்சரின் முதலிரு தங்கைமாரும் பல்கலைக் கழகத்திற்கு அருகாமையில் அறையெடுத்துத் தங்கியிருப்பதால் அவர்களிற்கு செய்தி உடனே தெரிய வாய்ப்பில்லை.

அநபாயன் கமலா டீச்சரின் வீட்டை அடைந்த போது, ஏற்கனவே தந்தையாரும், கடைசிப்பையனும் பெரியாஸ் பத்திரிக்குச் சென்றுவிட்டிருந்தார்கள். கடைசித் தங்கை சாரதா மட்டுமே வீட்டிலிருந்தாள். அவளை ஆறுதல் படுத்தியபடி அவனது தாய் செல்லம்மாவும், இன்னும் சில அயல்வீட்டுப் பெண்களுமிருந்தார்கள்.

# அத்தியாயம் மூன்று: யார் இந்தச் சாமியார்?

சுற்றிவர கண்ணுக்கெட்டிய தூரம் வரை பரந்த வயல்வெளியில் தொலைவில் நீலவானப் பின்னணியில் பனை, தென்னந்தோப்புக்கள்தான் தெரிந்தன. "ஸ்.ஸ்'சென்று வீசும் மெல்லிய தென்றலையும் அங்கும் இங்குமாய் அலைவதைப்போல் பறக்கும் ஊர்லாத்திகளின் ஒசைகளையும் இடையிடையே கூட்டம் கூட்டமாகப் பறக்கும் கிளிகளினதும் தனிமையில் சஞ்சரிக்கும் மணிப்புறாக்களினதும் ஒலிகளையும் தவிர வேறெவ்வித அரவமுமற்று அந்தப் புதர்கள் மண்டிக்கிடந்த மணற்குன்று காட்சியளித்தது. கிராமத்தின் ஒருகோடியில் வயற்காணிக்கு நடுவில் தனிமையில் ஆழ்ந்திருந்த அந்த மணற்குன்று தவமியற்றும் யோகியைப்போல் காட்சியளித்தது.

மனித நடமாட்டமெதுவுமற்ற அந்த மணற்குன்றில் ஒன்றிரண்டு பனைகளும், தென்னைகளும் தொட்டாற்சிணுங்கிப் புதர்களுமே பெருமளவு காணப்பட்டன. புதர்களாலும், பனைகளாலும் மறைக்கப்பட்ட இடத்தில் இயற்கையாகவே இருப்பதற்கேற்ற வகையில் அமைந்திருந்த பாறையொன்றில் அமர்ந்திருந்தபடி எதிரே விரிந்திருந்த காட்சியினை வெறித்தபடி தனக்குள்ளாகவே பெரிதும் சிந்தனையில் மூழ்கியவனாக அநபாயனிருந்தான். அந்த மணற்குன்றும் பனைகளும், தென்னைகளும் வயல்வெளிகளும், பறவைகளும் விரிந்து கிடக்கும் நீலவானும் அவன் வாழ்வின் ஒரு அங்கமாகவே மாறிவிட்டிருந்தன. நேரம் கிடைக்கும் வேளைகளிலெல்லாம் அங்கு கவிந்து கிடக்கும் அமைதியில் மூழ்கி விடுவதைப்போல் பிடித்தமான தொரு செயல் அவன் வாழ்வில் வேறெதுவுமில்லை எனலாம்.

கிராமத்துக்கேயுரிய மெல்லிய ஆரவாரங்களிலிருந்து விலகி ஒரு ஒளிமயமான எதிர்காலத்தைப்பற்றி, சுரண்டல்கள், அடக்குமுறைகளிற்கெதிரான ஓர் சமுதாய அமைப்பினைப்பற்றி இடைக்கிடையே அவன் நெஞ்சினைக் கவர்ந்த கமலா டீச்சரின் கடைசித் தங்கை சாரதாவைப்பற்றிச் சிந்திப்பதற்கு அவன் அந்த இடத்தையே நாடுவான்.

கமலா டீச்சர் இன்னும் ஆஸ்பத்திரியில்தான். சிறுவயதிலிருந்தே தர்மங்களையும் கோட்பாடுகளையுமே மேலான இலட்சியங்களாக ஏற்று வாழ்ந்து வந்த அந்த மென்மையான உள்ளத்தினை அந்தக் கீழ்த்தரமான மிருகங்களின் கூட்டு வெறியாட்டம் எத்தனை தூரம் புண்படுத்தியிருக்கும்.கமலா டீச்சரிற்கு நடந்த செயல் இரு உண்மைகளை வெளிப்படுத்தியிருக்கிறது. ஒரு அடக்கப்படும் இனத்தின் உறுப்பினர் என்ற வகையில் அவ்வினத்தினரால் புனிதமாகக் கருதப்படும் ஒரு கோட்பாட்டினைச் சிதைத்ததன் மூலம் அடக்குமினம் இன்னுமொரு முறை சரித்திரத்தில் தனது கொடூரக் கரங்களைப் பதித்து விட்டுள்ள அதே சமயம்.அதற்கும் கீழாக இன்னுமொரு உண்மையையும் காட்டி நிற்கின்றது.

பெண்ணிற்கும் உணர்வுகள் உண்டு என்பதனை ஏற்றுக்கொள்ள மறுத்து பெண்ணினை வெறுமனே போகப் பொருளாகக் கருதும் ஆண்கள் தலையெடுத்த சமுதாய அமைப்பினில் ஆண்களின் கேவலமான வெறியாட்டத்திற்குப் பலியான ஒரு உத்தமியின் கண்ணிர்க் கதையினையும் வெளிப்படுத்தி நிற்கிறது.

அநபாயனின் சிந்தனைகளோ சங்கிலித் தொடராக விரிந்த வண்ணமேயிருந்தன. கொதிக்கும் எண்ண அலைகளும், விடைதேடிடும் வினாக்களுமாக அநபாயனின் நெஞ்சம் இளமைக்கேயுரிய கொதிப்பினில் வெடித்துக்கொண்டிருந்தது. கமலா டீச்சர் கோழையல்ல.வாழ்வினை சவாலாக ஏற்று வாழும் பக்குவம் அவவிற்கு

நிறையவேயுண்டு. தகப்பனின் வளர்ப்பும் ஈஸ்வரனின் தொடர்பும் நிச்சயம் அவவின் வாழ்வினைப் பயனுள்ளதாக்க வைத்திடும் வல்லமை கொண்டவை.

அநபாயனின் சிந்தனை கமலா டீச்சரிலிருந்து வேறு துறைக்கு திரும்பியது.

ஏற்றத்தாழ்வுகள் இல்லாமல் ஒற்றுமையாக இன்பமாக வாழ்வதற்கு வழிகளிருக்கையில் மனிதர்கள் ஏன் மனிதர்களை தரம்பிரித்து ஏற்றத் தாழ்வுகளிற்குள் மூழகடித்து ஏழை, பணக்காரர் என்று வர்க்க வேறுபாடுகளிற்குள் அமிழ்த்தி வாழ்கிறார்கள்? பட்டினியால் கோடிக்கணக்கான மக்களை சாகவிட்டு அந்த மக்களின் உழைப்பினில் வாழும் மக்களோ மாளிகைகளில் ஆனந்த சயனம் புரிகின்றார்கள். இது ஏன்? இந்த மக்கள் கூட்டமே மக்களை இனம், மதம், மொழி ரீதியில் பிளவுபடுத்தி தங்களுக்கெதிராக எழுந்துவிடாமல் தடுத்துவிடுகிறது.

சிந்தனை மனிதனின் அறியாமையைப் போக்குகின்றது. விடை தெரியாமல் தவிக்கும் நெஞ்சிற்கு விடையினைத் தந்துவிடுகின்றது.தெளிவினை ஏற்படுத்துகின்றது.

"தம்பி பலமான சிந்தனையோ, அப்படி எந்தக்கோட்டையைப் பிடிக்க இந்தச் சிந்தனையோ..."\

திடுக்கிட்டவனாக சிந்தனையினின்றும் நீங்கியவனாக அநபாயன் திரும்பினான். எதிரில் காவியும் தாடியும் ஒளிமயமான கண்களுமாகத் கதைகளில் வருவதைப்போல் ஒரு சாமியார் நின்றிருந்தார். "அப்பாடா.இயற்கை எவ்வளவு இனிமையாக இருக்கின்றது" இவ்விதம் ஆனந்தமான குரலில் கூறியவர் கலகலவெனச் சிரித்தபடி அநபாயனிற்கருகில் மணற்திட்டியில் அமர்ந்தார். சிந்தனையை கலைத்துவிட்ட அந்த சாமியார் மேல் ஏற்பட்ட வெறுப்பினை வெளிக்காட்டாமல் சொற்களை உதிர்த்த அநபாயனின் சொற்களில் விரவி நின்ற வெறுப்பினைச் சாமியார் புரிந்துகொண்டார்.

"சமுதாயப் பிரச்சனையிலிருந்து விலகி பேரின்பத்தில் திளைத்திருக்கும் சாமியாருக்கு இயற்கை இனிக்கத்தானே செய்யும்".

வெறுப்புடன் உதிர்ந்த அநபாயனின் சொற்களில் தொங்கி நின்ற குத்தலைக் கவனித்த சாமியார் மெல்லப் புன்முறுவல் பூத்தார்.

அந்தப் புன்முறுவல் மாறாதவராக சாமியார் தொடர்ந்தார். "சாமிமார்களென்றால் தம்பிக்கு அவ்வளவு வெறுப்போ' நான் இதுவரை பார்த்த சாமிமாரெல்லாம் கள்ளச்சாமிமார்கள், பொம்பிளைச் சாமிமார்கள்.மக்களை ஏமாற்றி வாழும் எத்தர்கள்."

"என்ன தாக்குதல் பலமாகவேயிருக்கின்றதே.." என்று இலேசாகச் சிரித்த சாமியார் தொடர்ந்தார். "தம்பி சொல்வதிலும் நியாயம் இருக்கத்தான் செய்கின்றது.சமுதாயம் சீரழிந்து கிடப்பதற்கு ஒரு சில கள்ளச் சாமிமார்களும் காரணந்தான். அதற்காக எல்லாச் சாமிமார்களுமே கள்ளச் சாமிமார்களல்ல."

இவ்விதம் கூறிய சாமியாரின் தொடர்ந்து வந்த சொற்கள் அநபாயனின் நெஞ்சில் ஒருவித திகைப்புடன் கூடிய சந்தேகத்தை உருவாக்கின .இவர் உண்மையிலே சாமியார் தானா? அல்லது சாமியாரைப்போல் நடிக்கும் இன்னுமொரு கள்ளச்சாமியார்தானோ.கள்ளச் சாமியார்களும் எத்தனை வகைகளில் வேறுபட்டு நின்கின்றார்கள்.

## அத்தியாயம் நான்கு: மர்மச்சாமியார்!

"தம்பி நீ சொல்வதிலும் உண்மை இருக்கத்தான் செய்கின்றது; ஆதிமனிதனின் அறியாமையில் உருவானது சமயம். ஆமாம் தம்பி இயற்கையின் விளைவுகளிற்கு அர்த்தம் புரியாத நிலையில், அவற்றிற்குக் காரணங்களைக் காட்டிட மனிதரால் 'கடவுள்' எனும் கோட்பாடு வைக்கப்பட்டது. வானம் இடித்தால் அல்லது கடல் பெருகி புயல் அடித்தால் "கடவுள்" கோபம் அடைந்திருப்பதாகக் கருதிக் கொண்டார்."

இவ்விதம் சொல்லிய சாமியார் தாடியை மெல்ல நீவியபடி மேலும் தொடர வாயெடுக்கையில் அநபாயன் குறுக்கிட்டான்.

"அப்படியானால் நீங்கள் கடவுளை நம்பவில்லையா?" இதற்கு இலேசாக சிரித்தபடியே சாமியார் தொடர்ந்தார்;

"தம்பி மனிதரால் அறியமுடியாதபடி புதிர் நிறைந்ததாக இப்பிரபஞ்சத்தின் தோற்றமிருப்பதை நான் ஒப்புக் கொள்கிறேன்; தம்பி பொருளும் சக்தியும் ஒன்றென்று நவீன விஞ்ஞானம் கூறுகின்றது. என்னைப் பொறுத்தவரையில் இவ்வுலகம், கிரகங்கள், நட்சத்திரங்கள், பால்வெளிகளை உள்ளடக்கிய இயற்கையே சக்தி; அச்சக்தியே இயற்கை. இயற்கையில் யாவுமே ஒழுங்காக இருக்கின்றன. மனிதரும் ஒழுங்காக இருப்பாரானால் பிரச்சனைகளே இல்லை."

"அறியாமையில் உருவான சமயம் என்கின்றீர்களே! அதனை நீங்கள் நம்புகிறீர்களா..?"

"தம்பி! நமக்கும் மேலாகவொரு புதிரான சக்தி இருப்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் சமயத்தையோ அதன் மூடத்தனமான கோட்பாடுகளையோ நான் ஏற்கவில்லை. அன்றாடம் பிரச்சனைகளால் வாடும் மனிதனை பிரச்சனைகளைத் தீர்த்து புதுப்பாதை காட்டுவதற்கு சமயம் முயலவில்லை. மாறாக என்ன செய்கின்றது? ஒரு கன்னத்தில் அடித்தால் மறுகன்னத்தைக் காட்டு" "கொடுமை செய்பவன் நரகத்திற்குப் போவான். எல்லாவற்றையும் கடவுள் மேல் பழி போட்டுவிட்டு நிம்மதியாகவிரு. இவ்விதமான போதனைகளால் சமயம் மனிதரை, பிரச்சனைகளுக்கு முகம் கொடுப்பதற்குப் பதில் பிரச்சனைகளில் இருந்து தப்பி ஒடவைப்பதால், மனிதரை மனிதராக வாழ்வதற்கு நடைமுறை சாத்தியமான வழிகளைக் கூறாமல் நடமுறைக்கொவ்வாத நரகத்தைப் பற்றியும், சொர்க்கத்தைப் பற்றியும் போதிப்பதால். அத்தகைய சமயத்தை நான் ஆதரிக்கவில்லை. நமக்குப் புதுவிதமான, நடைமுறைக்குச் சாத்தியமான பிரச்சனைகளிற்கு அறிவுபூர்வமான தீர்வுகளைக் கூறுகின்ற 'சமயம்'தான் தேவையே தவிர மூடநம்பிக்கை களுடன் கூடிய, மனிதனை பிரச்சனைகளிலிருந்து கோழையைப் போல ஒடவைக்கின்ற சமயம் தேவையில்லை."

இவ்விதம் வெகு தெளிவாகக்கூறிய சாமியாரை அநபாயன் வியப்புடன் நோக்கினான்; “இந்தச் சாமியார் நிறைய நூல்களைப் படித்தவராக இருக்கவேண்டும்". என எண்ணிக் கொண்டான். சாமியாரோ மேலும் தொடர்ந்தார்.

"தம்பி சமுதாயத்தில் நிகழும் சகல பிரச்சனைகளையும் உருவாக்கியவன் மனிதரே! மனிதரின் அறியாமையாலும், சுயநல வேட்கையாலும் உருவான பிரச்சனைகளே மனிதரிற்கிடையே நிலவிடும் ஏற்றத் தாழ்வுகளுக்குக் காரணம், என்று குகைகளில் குழுக்களாக வாழ்ந்து வந்த மனிதர் வேளாண்மை செய்வதற்குக் கற்றுக் கொண்டாரோ

அன்றிலிருந்து உருவான பிரச்சனைகளின் தொடர்ச்சியான விளைவுகளே இன்றைய சமுதாய அமைப்பு."

இச்சமயம் எங்கோ தொலைவிலிருந்து வேட்டுச் சத்தங்கள் கேட்டு மறைந்தன; அண்மைக் காலமாகவே சிங்கள வெறி இராணுவத்தின் அக்கிரமங்கள் வெகுவாகவே அதிகரித்துள்ளன. விடுதலைப் போராளிகளை தேடுதல் என்ற போர்வையில், அப்பாவி இளைஞர்களை கைதுசெய்து சித்திரவதைப் படுத்துவது, சுட்டுக் கொல்வது, பெண்கள் தாய்மார்களை மிருகத்தனமாகப் பாலியல் வன்முறைக்குள்ளாக்குவது, இராணுவ முகாம்களில் பெண்களை நிர்வாணமாகத் துன்புறுத்துவது. ஒவ்வொரு மானமுள்ள தமிழரையும் இரத்தக் கொதிப்பூட்டும்படியான செயல்கள், இறுதியில் அந்த வெறியர்களின் அழிவிலேயே முடியுமென்ற வரலாற்று நியதியை அந்த முட்டாள்களால் உணர முடியவில்லைதான்.

சாமியாரும் கொதித்தார்.

"தம்பி கேட்டாயா கோழைகள், மானநரம்பற்ற பேடிகள் அப்பாவி மக்களைக் கொன்று குவிக்கிறார்கள். ஆயினும் அந்த முட்டாள்கள் நீதியின் மகத்துவத்தை தர்மத்தின் சரித்திரத்தை அறியவில்லை; தாய்மார்களின் கன்னியரின், மழலைகளின் கண்ணிர்த்துளிகளிற்கு அவர்கள் நிச்சயம் பதில் சொல்லியேயாகவேண்டும்.”

சற்று உணர்ச்சி வசப்பட்டவராகக் கூறிய சாமியார் இடை நிறுத்தியவராக பழைய கதைக்குத் திரும்பினார்.

"ஆ. எங்கு விட்டேன். ஆமாம் மனிதர்கள் எவ்விதம் ஏற்றத் தாழ்வுகளை உருவாக்கினார்கள் என்பதனை விளக்கிக் கொண்டிருந்தேன் அல்லவா. ஆரம்பத்தில் குழுக்களாக விவசாயம் செய்த மனிதர்கள் காலப்போக்கில் தனித்தனியாகச் செய்யத் தொடங்கினர். ஒரு சிலர் கூடுதலாகப் பிரயாசப்பட்டதற்கு நல்ல விளைச்சல் கிடைப்பது இயல்புதானே. மேலும் சில இடங்களில் தரை அமைப்பு சரியில்லாமல் இருந்தால் அவ்விடத்து விளைச்சல் பாதிக்கப்படலாம் அல்லவா. அல்லது இயற்கையின் கோபம் சில இடங்களை அழிக்கலாம். இவ்வாறாக ஒரு சிலரிடம் கூடுதலாக விளைச்சல் இருக்கையில் மற்றவர்கள் பாதிக்கப்பட்டிருந்தார்கள். விளைவு! பாதிக்கப்பட்டவர்கள் 'விளைச்சல்' கிடைத்தவரிடம் சீவியத்திற்கு தங்கவேண்டிய நிலை. ஏழை பணக்காரர் உருவான கதை இதுவே. காலப்போக்கில் பணம் படைத்தவர் மேலும் பணக்காரராகையில் ஏழைகளோ மேலும் ஏழைகளாகப் போன அதேசமயம் எண்ணிக்கையிலும் அதிகரித்தார்கள்."

"இந்தச் சாமியார் இலேசுபட்ட ஆளல்ல; இவரிடம் நிறையவே விஷயமுள்ளது. இவரிற்குப் பின்னால் நிச்சயம் ஒரு மர்மம் மறைந்திருக்கத்தான் வேண்டும்.” இவ்விதம் எண்ணிய அநபாயன் சாமியாரை நோக்கினான். சாமியார் இருக்கையிலிருந்து மெல்ல எழுந்து கொண்டார். "தம்பி அடுத்த முறை உன்னைச் சந்திக்கும் பொழுது மேலும் நிறையவே பேசுவோம்."

"சாமியார் இடையில் தங்களைச் சந்திக்க வேண்டுமானால் எங்கு சந்திக்கலாம்.?”

தனது முகவரியைக் கேட்பதற்குப் பதில் இவ்விதம் வெகு சாமார்த்தியமாகக் கேட்ட அநபாயனை நோக்கி இலேசாக புன்முறுவல் பூர்த்த சாமியார் மேலும் கூறினார்.

"தம்பி! வெகு விரைவிலேயே உன்னை எனது ஆச்சிரமத்திற்கே அழைத்துச் செல்வேன்; அதுவரை பொறுத்திரு. இவ்விதம் கூறிய சாமியார் பதிலெதனையும் எதிர்பாராதவராக

விடுவிடென நடையைக் கட்டிவிட்டார். "கண்ணால் காண்பதும் பொய்; காதால் கேட்பதும் பொய்; தீர விசாரிப்பதே மெய்" இவ்வாறாக தமிழில் ஒரு பழமொழியே உண்டு. அப்பழமொழியின் அர்த்தத்தை வெகு சீக்கிரமே அநபாயன் அச்சாமியார் மூலம் அறிந்து கொண்டான்.

## அத்தியாயம் ஐந்து: தம்பியின் மனமாற்றம்!

இரவு வெகுவாகவே சீக்கிரமாகப் படரத் தொடங்கிவிட்டது. விண்ணில் ஆங்காங்கே சுடர்க் கன்னிகள் மெல்ல எட்டி எட்டிப் பார்த்து, நாணி நகைக்கத் தொடங்கிவிட்டிருந்தார்கள். சாமியார் போய் அரை மணித்தியாலங்களுக்கு மேலாகிவிட்டது. வீட்டில் அம்மா கவலைப்பட்டுக் கொண்டிருப்பா, பொடியனை இன்னும் காணவில்லையே என்று. ஒரு காலத்தில் வீட்டில் பெண்களைத்தான் பத்திரமாகப் பெற்றோர் பார்த்துக் கொண்டார்கள். ஆனால் இன்றோ ஆண்களை வைத்துப் பாதுகாப்பதே பெரிய தலையிடி பெற்றோர்க்கு. கிராமத்தின் ஒரு கோடியில் ஆமிக்காரன் தேடத் தொடங்கி விட்டானென்றதுமே பெற்றோர் ஆண் பிள்ளைகளைக் கொல்லைப் புறங்களால் அடுத்த கிராமங்களிற்கனுப்புவதும். வாழ்வே ஒரு கண்ணாமூச்சி விளையாட்டு என்று யாரோ ஒரு பிரபல நாவலாசிரியர் கூறியிருப்பது சரியாகத்தான் இலங்கைத் தமிழர்களைப் பொறுத்தவரை இருக்கின்றது. மக்கள் மரணத்துடன் வாழுவதற்குப் பழகிக் கொண்டார்கள்.

வீடு செல்வதற்கு முன் அநபாயன் கமலா டீச்சரின் வீடு செல்ல விரும்பினான். பாவம் சாரதா. வீட்டுப் பொறுப்புக் களெல்லாமே அவள் தலையில் விழுந்துவிட்டன. தந்தையார் நடராஜா வாத்தியாரோ இடிந்து போனவராகிவிட்டார். வாழ்வில் எதிலுமே பற்றுதலற்ற சடமாகவவே மாறிவிட்டார். கல்யாணமும் குடியுமாக இருக்கவேண்டிய வயதில் குடும்பத்துச் சுமை தாங்கியாக விளங்கிய கமலாவிற்கு நடந்ததை எண்ணுவதில் அவர் இயலாமையால் குமுறி வெடித்தார். கடவுள் பக்தனான அவருக்கு கடவுள் மேலேயே ஒரு சந்தேகம் ஏற்பட்டது. அவருக்கு மட்டும் சக்தியிருக்குமாயின் சிங்களக் காடையரை, காமுக வெறியர்களை ஈவிரக்கமற்ற நயவஞ்சகரைக் கண்டதுண்டமாக வெட்டிக் கொத்திக் குதறிக் காகங்களுக்கு விருந்து வைத்தால் மாத்திரமே சற்று அமைதி அடைவார்.

தமிழரும் சிங்களவரைப்போல் இரத்தமும் சதையும் உணர்வுகளுமுள்ள ஒரு மனிதர்தானே. பிறகேனிவ்விதம் சிங்கள இனத்தையே பிழையாக வழி நடாத்தும் கொலைகாரப் பாவிகளைச் சிங்களச் சமுதாயம் அனுமதித்து விடுகின்றது. இன உணர்வு எவ்விதம் மனிதரை ஈவு இரக்கமற்றவராக மாற்றி விடுகின்றது என்பதற்கு இன்றைய கொலைகாரச் சிங்களத் தலைவர்களும் காடையரும், இராணுவ வெறியர்களும் உதாரணம். இவ்விதமான எண்ண ஓட்டங்களிற்குள் மூழ்கியவராக வெந்து கிடப்பதே நடராஜா வாத்தியாரின் வழக்கமாகிவிட்டது.

அநபாயன் கமலா டீச்சரின் வீட்டை அடைந்த போது நடராஜா வாத்தியார் முன் திண்ணையில் சாய்ந்தவராகச் சிந்தனையில் மூழ்கிக்கிடந்தார். உள்ளே குசினியில் சாரதா இடியப்பம்' அவிப்பதற்கு 'மா' குழைத்துக் கொண்டிருந்தாள். கமலா டீச்சரின் செல்லக் குட்டியான கடைசித் தம்பி பார்த்திபனைக் காணவில்லை. மற்ற இரு சகோதரிகளும் கமலா டீச்சருடன் ஆஸ்பத்திரியிலே தங்கியிருந்தார்கள். நடராஜா வாத்தியாரும் சாரதாவும் சற்று முன்னால்தான் ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பியிருந்தார்கள்.

மா குழைத்துக் கொண்டிருந்த சாரதாவின் வதனத்தில் அநபாயனைக் கண்டதும் சற்றே மகிழ்ச்சியலைகள் படர்ந்தன. அவளைப் பார்க்கையில் அநபாயனிற்குப் பாவமாகவிருந்தது.

"சாரதா கமலா டீச்சர் எப்படியிருக்கிறா."

"இப்போதைக்கு பரவாயில்லை. இனி உயிரிற்கு ஆபத்தெதுவுமில்லை என்று "டொக்டர்கள்' சொல்லி விட்டார்கள்."

அநபாயன் சாரதாவிற்குதவியாக வெங்காயம், கிழங்குகள் வெட்டுதல், தேங்காய் துருவுதல் போன்ற வேலைகளைச் செய்து கொடுத்தான்.

சாரதா தொடர்ந்தாள். "பாவம் அக்கா எங்களிற்கெல்லாம் தாய்க்குத் தாயாகவிருந்து பார்த்ததைத் தவிர, அவவாழ்வில் கண்ட சுகம்தானென்ன. ஒரு உயிருக்கும் தீங்கே நினைக்காத அவ்விற்கேன் இந்த நிலை. எவ்வளவு தூரம் மனோ ரீதியாக. உடல் ரீதியாக அவ வேதனை அடைந்திருப்பா."

அநபாயன் கமலா டீச்சரிலிருந்து பேச்சை வேறு திசைக்கு திருப்ப விரும்பினான்; சாரதாவை மேலும் மேலும் வேதனைக்குள்ளாக்கிட அவன் விரும்பவில்லை.

"எங்கை. பார்த்திபனைக் காணவில்லை."

பார்த்திபனைப் பற்றிக் கேட்டதும் சாரதாவின் முகத்தில் கலக்கம் படர்ந்தது.

"கொஞ்ச நாளாகவே அக்காவிற்கு இது நடந்ததிலிருந்து அவன் போக்கே பெரிதும் மாறி விட்டது அநபாயன். அக்காவின் செல்லக்குட்டி அவன். அவன் எங்கு போறான். எப்பவாறானென்பது யாருக்குமே தெரியாது. யாரும் விசாரிக்கக்கூடிய மன நிலையிலும் இல்லை. முன்பு மாதிரி அவனில்லை. தனியவிருந்து அடிக்கடி யோசித்துக் கொண்டேயிருப்பான்."

என்ன மாதிரியிருந்த குடும்பம் எப்படிச் சிதைந்து விட்டது. அன்று நேரம் கழித்து அநபாயன் வீடு திரும்பும்போது அங்கு செல்லம்மா மடியில் நெருப்பைக் கட்டிக்கொண்டு காத்திருந்தாள்.

பக்கத்து வீட்டு பாக்கியத்திடம் "பொடியன்ர போக்கே நல்லா மாறிவிட்டது. கமலாவின் விஷயத்திலிருந்து அவன் பெரிதும் மாறி விட்டான். எங்கு போறான் எப்ப வாறான் என்பதே தெரியாது."

இவ்விதம் அங்கலாய்த்து கொண்டிருக்கையில், அவற்றைக் கேட்டுக்கொண்டே வந்த அநபாயனின் இதழ்களில் மெல்லியதொரு இளநகை படர்ந்தது. சாரதா பார்த்திபனைப் பற்றிக் கூறியவை நினைவுக்கு வந்ததே அவனது அந்த இளநகைக்குக் காரணம்.

## அத்தியாயம் ஆறு: கமலா எங்கே?

நாட்கள்தான் எவ்விதம் உருண்டோடி விடுகின்றன. 'காலம் தான் காத்து நிற்பதில்லையே. கமலா ஆஸ்பத்திரியில் இருந்து வீடு வந்து ஏறத்தாள ஒரு வாரம் கழிந்து விட்டது. இந்த ஒரு வாரமாக அவளடைந்த மன வேதனை வார்த்தையில் அடங்காது. கிராமத்தவர்கள் ஒவ்வொரு நாளும் மாறி மாறி வந்தபடி ஆறுதல் கூறி விட்டுச் சென்றார்கள். நடராஜா வாத்தியாரோ எதிலுமே பற்றற்றவராய் சுருட்டொன்றைப் புகைத்தபடி திண்ணையில் குந்திவிடுவாராயின் அவரை எழுப்புவதே பெரும்பாடாகப் போய்விடும். சாரதாதான் 'அப்பு உள்ளுக்கு வந்து இரணை". என்று வற்புறுத்தி ஒரு மாதிரி அவரை உள்ளுக்குள் கொண்டு வந்து விடுவாள். அதன் பிறகுதான் அவளுக்கு ஓரளவாவது ஆறுதல். கமலாவின் போக்கும் முன்பு மாதிரியில்லை. பெரிதும் மாறித்தான் போய்விட்டாள். சாரதாவே வீட்டு வேலைகளையெல்லாம் கவனித்துக் கொண்டாள். எவ்வளவுதான் முற்போக்காய் இருந்தபோதிலும் கமலாவால் அமைதியாக இருக்க முடியவில்லை. அவளை அச்சம்பவம் பெரிதும் பாதித்து விட்டது.

எந்நேரமும் சிந்தனையில் மூழ்கியவளாகவேயிருந்தாள். ஒருகணம் "இனியும் நான் வாழ்வதில் என்ன பயன்?" என எண்ணுவாள். மறுகணமே "நான் சாவதால் மட்டும் பெண்களின். எம் தமிழ்ப் பெண்களின் அவலநிலை மாறிவிடுமா?" இவ்விதம் எண்ணமிடுவாள். 'இதுவரையில் ஈஸ்வரனின் நினைவொன்றுடன் வீட்டிற்காக உழைத்தேன். ஆனால் இனிமேலும் எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டு பழைய வாழ்வினில் என்னால் இறங்கவே முடியாது. பெண்களும் அக்கிரமங்களுக்கெதிரான போரில் ஆண்களுடன் சேர வேண்டிய காலம் வந்துவிட்ட்து'. முரண்பட்ட எண்ணப் போக்குகளுக்குள் சிக்கியவளாக அலைமோதிக் கொண்டிருந்த கமலாவின் நிலையோ பரிதாபத்திற்குரியதாக இருந்தது. இதே சமயம் சிங்கள இராணுவத்தினரின் அட்டகாசம் நாளுக்கு நாள் அதிகரித்த வண்ணமேயிருந்தன. நீண்டதொரு தற்காப்பு போர் முறையைப் பற்றியதொரு சிந்தனைக்குச் சகல தமிழர்களும் தள்ளப்பட்டிருந்தார்கள். உணர்ச்சி வெறியில் மேற்கொள்ளப்படும் சிங்கள இராணுவத்தினர் மீதான சிறுதாக்குதல்கள் ஏற்படுத்திய அழிவுகள் தமிழ் மக்களை விடுதலைப் போராட்டம் பற்றிய தீவிர சிந்தனைக்குத் தள்ளியது. பல்வேறு வகைப்பட்ட சித்தாந்த வேறுபாடுகளைக் கொண்டதாக விளங்கிய விடுதலை இயக்கங்களைப் பற்றி நன்கு புரிந்து எடை போடுவதற்கு முதன் முதலாக சகல தமிழர்களும் முயன்றார்கள். நாளுக்கு நாள் சீர்குலைந்து கொண்டுவந்த தமிழீழத்தின் நிலமை தமிழர்களை ஒற்றுமையின் அவசியம் பற்றியும் நீண்ட கால தற்பாதுகாப்புடன் கூடியதொரு போர்முறை பற்றியும் முன்னெப்போதையும் விட மிக அதிகமாகவே இப்போது சிந்திக்க வைத்தன.

அதேசமயம் சிங்கள இனவாத அரசோ மேலும் மேலும் சிங்களப் பாமர மக்களை இனவாதச் சேற்றில் மூழ்கடிப்பதில் வெற்றி பெற்றுக் கொண்டு வந்த, அதேசமயம் தமிழர்களுக்கெதிரான போர் ஒன்றைப் பற்றிய பிரச்சாரத்தை முடுக்கிவிட்டு ஆயுதப் படைகளுக்கு அனுசரணையாக சிங்களவர்களைத் திரட்டும் பணியில் ஈடுபட்டு வந்தது. இரு இனங்களுக்கிடையிலான முரண்பாடுகள் நாளுக்கு நாள் கூர்மையடைந்தே வந்தன. தமிழ் மக்களின் விடுதலைப் போராட்டத்தினை நசுக்குவதற்கு ஸ்ரீலங்கா அரசோ சகலவிதமான கொடூர முறைகளையும் கையாளத் தொடங்கியிருந்தது. எல்சல்வடோரில், நிக்கரகுவாவில் சி.ஐ.ஏ. பின்பற்றும் முறைகளையும் பலஸ்தீனியர்களுக்கெதிராக இஸ்ரேலிய மொசாட் கைக்கொள்ளும் முறைகளையும் பூரீலங்கா அரசு பின்பற்றத் தொடங்கியதின் விளைவு தமிழ்க் கிராமங்கள் எரிக்கப்பட்டன. தமிழ் மக்கள் ஏராளமாகக் கொல்லப்பட்டனர். அதே சமயம் ஆயிரக் கணக்கில் கைது செய்யப்பட்டனர். பெருமளவில் காணாமல் போயினர். தமிழ்ப் பெண்கள் பாலியல் வன்முறைக்குள்ளாகினர். பொதுவான நாட்டு நிலமை இப்படியிருக்கையில் தமிழ் மக்கள் சிறிதளவாவது ஆறுதலுடன் இருந்தார்களென்றால் அதற்குக் காரணம் தென்

இந்தியாதான். ஆறு கோடி இந்தியத் தமிழர்கள் இருக்கும் வரையில் சிங்களவரால் தமிழர்களை ஒரு போதுமே முற்றாக அழித்துவிட முடியாது என்ற நினைப்பொன்றே ஒருவித தென்பை அவர்களுக்குத் தந்தது.

இது இவ்வாறிருக்க கமலாவோ நாட்டைப் பற்றியும் வீட்டைப் பற்றியும் மாறி மாறி எழுந்த உணர்வுகளுக்குள் தடுமாறிக் கொண்டிருந்தாள். அதுவொரு அமாவாசை இரவு. வேளைக்கே இருண்டு விட்டிருந்தது. வீட்டினில் எல்லோரும் ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தார்கள், கமலாவைத் தவிர. கட்டிலில் படுத்திருந்தபடியே யன்னல்களினூடு இரவின் கருமையில் பயங்கரமாக காற்றில் ஆடிக் கொண்டிருந்த பனைகளையே வெறித்தபடியிருந்த கமலாவின் கவனத்தை "கமலா. கமலா", என்ற மெல்லிய குரலில் யாரோ அழைப்பது போன்று வந்த ஒலி கவரவே கூர்ந்து கவனித்தாள்.

ஆமாம் யன்னலுக்கு வெளியில் இருளோடு இருளாக யாரோ நிற்பதை அவளால் உணரமுடிந்தது. தன்னை வெகுவாகவே சுதாகரித்தபடி மெல்ல எழுந்தவள் தலைமாட்டில் கிடந்த ரோச்சை எடுத்து யன்னலினூடு ஒளி வெள்ளத்தைப் பாயவிட்டாள். 'டோர்ச்' ஒளியில் கண்ட உருவம் அவள் நெஞ்சில் வியப்பையும், திகைப்பையும், இன்பத்தையும் ஒருவித திகிலையும் ஒரே நேரத்தில் பாய்ச்சின. அங்கு நின்றிருந்தது வேறு யாருமல்ல. இருவருடங்களிற்கு முன்னால் தலை மறைவாகி விட்டிருந்த ஈஸ்வரனே நின்றிருந்தான்.

"ஈஸ்வரன் நீங்களா" என்றபடியே யன்னலை நெருங்கியவள் மெல்லத் திறந்ததும் கம்பியில்லாத அந்த ஜன்னல் வழியே ஈஸ்வரன் மெல்ல உள்ளே ஏறிக்குதித்தான்.

"கமலா டோச்சை 'நூரு' என்றவன் யன்னலுக்கருகில் நின்றபடியே தொலைவில் வேலிக்கப்பாலிருந்த வீதியையே நோக்கி நின்றான். தொலைவில் சில இராணுவ வாகனங்கள் விரையும் ஒலிகள் மெலிதாகக் கேட்டன. கமலாவிற்கு ஈஸ்வரன் இக்கட்டொன்றிலிருந்து தப்பி வந்திருக்கிறானென்பது மட்டும் புரிந்ததே தவிர வேறெதுவும் புரியவில்லை.

'இரண்டு வருடங்களிற்குள் ஈஸ்வரன்தான் எவ்வளவு மாறிவிட்டார்.

மறுநாள் விடிந்தது. நெடு நேரமாகியும் கமலா எழும் பாததைக் கவனித்த சாரதா கமலாவைத் தேடி அறையில் நுழைந்தபோது அவளை கட்டிலிருந்த காகிதம்தான் வரவேற்றது. அதை வாசித்தவள் மறுகணம் 'அப்பா என்று அலறிவிட்டாள்.

## அத்தியாயம் ஏழு: மகளின் கடிதம்.

சாரதா எத்தனைதரம் அக்கடிதத்தை வாசித்தாளோ, சாரதாவிற்கு தெரியாது. மீண்டும் மீண்டும் வாசித்தாள். கடிதம் இவ்வண்ணம் ஆரம்பமாயிருந்தது.

"அன்புமிக்க அப்பா!

"என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். என்னால் இதனைத்தவிர வேறெவ்வித முடிவினையுமே தற்சமயம் எடுக்க முடியவில்லை. பயப்படாதீர்கள். நான் தற்கொலை எதுவும் செய்து விடப்போவதில்லை."

இவ்வரிகள் தந்த ஆறுதலுடன் சாரதா தொடர்ந்து படித்தாள். தற்கொலை செய்து கொள்ளுமளவிற்கு நான் கோழையல்ல; வாழ்வினை சவாலாக ஏற்கும் பக்குவம் எனக்கு - உங்கள் மகளிற்கு நிறையவேண்டும் அப்பா!. உண்மையில் என்னை 'அந்தச் சம்பவம்' பாதித்துத்தான் விட்டது. அந்தப் பாதிப்புடன் தொடர்ந்தும் அதனை அப்படியே ஜீரணித்துக் கொண்டு வாழ்வதற்கு நிச்சயம் முடியவே முடியாது. எமது சமுதாயத்தில் ஏற்கனவே "பெண்கள்' வெறும் பண்டமாற்றுப் பொருளாகத்தான் வாழ்கின்றார்கள். அத்துடன் இப்போது தமிழ்ப் பெண்கள் சிங்கள இராணுவக் காடையரின் காமுக வெறியாட்டத்தை எதிர்கொள்ள வேண்டிய நிலையில் உள்ளார்கள், தமிழர்களின் போராட்டத்தில் பெண்களும் ஆண்களுடன் தோளுயர்த்திப் போரிட வேண்டிய தருணம் வந்து விட்டதாகக் கருதுகின்றேன். ஆமாம் அப்பா எனது தாய்நாட்டு விடுதலைக்கான வேள்வித்தீயினில் குதிப்பதற்கு நான் முடிவு செய்து விட்டேன். உங்கள் மகளைப்பற்றிய கவலையினை இனி விடுங்கள். ஈஸ்வரனை எனது வாழ்வில் கணவராக அடைந்து குடியும் குடித்தனமுமாக வாழ்வதற்கு எமது இன்றைய நிலமை எம்மை அனுமதிக்க வில்லை. ஆயினும் எமது மக்களின் விடுதலைக்கான போரில், அவருடன் இணைந்து போராடுவதை பெரும் பேறாகக் கருதுகிறேன்.

அப்பா! உங்களைப்போன்ற ஒரு தந்தைக்கு ஏற்பட்ட நிலமை எந்தத் தமிழனிற்கும் ஏற்படக்கூடாதென்றால். என்னை நீங்கள் நிச்சயம் வாழ்த்துவீர்களென்ற நம்பிக்கை நிறையவேயுண்டு. சாரதா, மைவிழி, தேன்மொழி, பார்த்திபன் எல்லோரிற்கும் என் அன்பினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்படிக்கு, அன்பு மகள்"

இதனைப் படித்து முடித்ததும்தான் சாரதா அப்பா' என்று அலறினாள். கிணற்றடியில் முகம் கழுவிக் கொண்டிருந்த நடராஜா வாத்தியாரும், அடுக்களையில் தேனிர் கலந்து கொண்டிருந்த பார்த்திபனும் 'என்னவோ ஏதோ என்று பதறியவர்களாக ஓடி வந்தார்கள். வந்தவர்க்கு முதலில் ஒருகணம் ஒன்றும் விளங்கவில்லை. கையில் கடிதத்துடன் நின்ற சாரதாவை வியப்புடன் நோக்கினார்கள்.

"என்னம்மா நடந்தது" என்ற நடராஜா வாத்தியார், அச்சமயம்தான் கமலா அங்கில்லாததைக் கவனித்தவராக, சாரதா வைத்திருந்த கடிதத்தைப் பறித்துப் படித்தார்.

ஏற்கனவே அதிர்ச்சியால் உடைந்து கிடந்த அந்தத் தந்தையின் நெஞ்சினில் இவ்விடயம் எவ்வித பெரிய அதிர்ச்சியினையும் தந்து விடவில்லை. மாறாக ஒரு வித ஆறுதலையே தந்ததெனலாம். அடக்கு முறைகளிற்கெதிரான புனிதப்போரில் குதித்துவிட்ட மகளிற்காக 'வாழ்த்துக்கள்' கூறிய அந்தத் தமிழ் ஆசிரியத் தந்தையின் உள்ளம் ஒரு புறத்தே தந்தைக்கேயுரிய பாச உணர்வுகளிலும் துடிக்கத்தான் செய்தது.

தமிழ் மக்களின் மிகமெல்லிய புனிதமான உணர்வுகளை, குடும்ப உறவுகளை எவ்விதம் சிறிலங்கா அரசின் கொடுங்கோலாட்சி குலைத்துச் சிதைத்துவிட்டது. ஒவ்வொரு தமிழனின் குடும்பத்திலும் ஏதோ ஒரு விதத்தில் கண்ணிர்க் கதையொன்றின் தடம் இல்லாமலில்லை என்ற நிலைக்கு நிலமை மோசமாகிக்கொண்டே வந்து கொண்டிருந்தது.

தமிழ்ச் சமுதாயத்தின் புரையேறிய இருபெரும் புண்களாக 'சீதனம் 'சாதி என்னுமிரு விடயங்களும் இருந்தபோதும், தமிழர்கள் அமைதியாக தை பிறந்தால் வழி பிறக்குமென்று ஆடி, புத்தாண்டை சித்திரையில் பண் பாடி வரவேற்று ஐப்பசித் தீபாவளியில் களித்துக் கார்த்திகையில் தீபமேற்றி கோயில் குளங்களென்று ஒருவித இனிமையாக வாழ்வை ஒட்டிச் சென்ற காலம் மலையேறிவிட்டது. இன்று மரணத்துடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். மனித வரலாற்றின் போக்குகளில் அடக்குமுறைகளும் அடக்கு முறைகளிற்கெதிரான போர்களும், வெவ்வேறு கால கட்டங்களில் வெவ்வேறு விதமான தன்மைகளில் வெடித்துக் கொண்டிருந்தன. இன்றைய சிறிலங்காத் தமிழர்களின் விடுதலைப் போரும் தென் கிழக்காசியாவின் முக்கியதொரு பிரச்சினையாக உருமாறி விட்டிருந்தது.

## அத்தியாயம் எட்டு: மண்ணின் மைந்தர்கள்!

வழக்கம்போல் அதிகாலையில் பால் கொடுத்து விட்டு வரும் வழியில்தான் அநபாயனிற்கு 'கமலா டீச்சர் இயக்கமொன்றில் சேர்ந்துவிட செய்தி தெரியவந்தது. கிராமத்தவர்களெல்லாம் கமலா டீச்சரைப் பற்றிப் பெருமையாகப் பேசிக்கொண்டார்கள். இதுவரை இருளில் தடுமாறிக் கொண்டிருந்தவர்களுக்கு விடிவெள்ளி தென்பட்டதைப் போல் அக்கிராமத்தவர்கள் சிலிர்த்துப் போனார்கள்.

அன்று மாலை, மெல்ல இருளத் தொடங்குகையில் அநபாயன் சாரதாவைப் பார்ப்பதற்காக நடராஜா வாத்தியாரின் வீட்டை அடைந்தபோது, பின்வளவில் சாரதா மட்டுமே கோழிகளுக்குத் தீனிபோட்டபடியிருந்தாள். மெல்லிய அந்தியின் முடிவில் தனிமையில் நின்றிருந்த சாரதாவின் தோற்றம் அநபாயனின் இதயத்தை அப்படியே இளக்கிவிட்டது. மெல்லப் பின்புறமாகச் சென்றவன் அவள் கண்களை பொத்தி மார்போடணைத்தபோது, திடுக்கிட்டவளாகத் திரும்பிய சாரதாவின் வதனத்தில், அநபாயனை கண்டதும் மகிழ்ச்சியலைகள் படர்ந்தன.

"என்ன இது அநபாயன். சிறுபிள்ளைமாதிரி” என்று பொய்க் கோபத்துடன் கூறிய சாரதாவைப் பார்த்து அநபாயன், குறும்புடன் "சாரதா அம்மாவிற்குக் கோபம் வந்துவிட்டால், கண்ணகிக்கே வந்த மாதிரித்தான்” என்றபோது சாரதா நாணிச் சிவந்தாள்.

சோகமும், திகிலும், படபடப்புமாக உருண்டு கொண்டிருந்த வாழ்வில் இந்த இளம் சோடிகளின் வாழ்வில் ஓரளவாவது சந்தோஷமான கணங்களைத் தருவது இத்தகைய சந்தோஷமான சந்திப்புக்களும், தனிமையில் இனிமைகளுமல்லவா.

மெல்லிய தென்றலில் பூவரசுகளும், பனைகளும் ஆடிக்கொண்டிருந்த வளவிற்கப்பால் விரிந்து கிடந்த வயல்வெளியில் கிளிகள் கூட்டங்கூட்டமாக பறந்து கொண்டிருந்தன. இடையிடையே அங்கிருந்த வேப்ப மரமொன்றிலிருந்து "குக்குறுபான்” கள் 'குக்குறுத்துக் கொண்டிருந்தன. கோழிகளைக் கூட்டினுள் "அடைய” விட்டு சாரதா, அநபாயனுடன் வீட்டினுள் நுழைந்த போது நன்கு இருட்டத் தொடங்கிவிட்டிருந்தது.

அறை "லைற்’களை எரியவிட்டவளாக, அடுக்களைக்குள் நுழைந்த சாரதாவை அநபாயன் தொடர்ந்தான். வழக்கம்போல் பார்த்திபனை இன்னும் காணவில்லை. நடராஜா வாத்தியாரையும் இன்னும் காணவில்லை.

"சாரதா. இனித்தான் நீங்கள் கவனமாயிருக்க வேண்டும். எனக்கென்றால் நீங்கள் இங்கிருப்பது நல்லதாகப் படவில்லை. பேசாமல் கொஞ்ச நாட்கள் எங்களுடன் வந்து விடுங்கள்."

"அநபாயன் ஏனப்படி சொல்கிறீர்கள்."

'பிட்டு" அவிப்பதற்காக, மாவைக் குழைக்கத் தொடங்கிய சாரதாவையே சிறிது நேரம் பார்த்தபடி நின்ற அநபாயன் தொடர்ந்தான்.

சாரதா. உங்கக்கா இயக்கமொன்றில் சேர்ந்த விடயம் ஊர் முழுக்கத் தெரியும். நிச்சயம் 'ஆமிக்குத் தெரியாமல் போகாது. காட்டிக் கொடுக்கும் உளவாளிகற்கா எம்மினத்தில் பஞ்சம். உங்களப்பாவும் தம்பியும் வரட்டும். எல்லாருமாக எங்கள் வீட்டிற்கு வந்து விடுங்கள். கொஞ்ச நாட்கள் இருந்து பாருங்கள்.”

சாரதாவிற்கு அநபாயன் சொல்வது சரியாகத்தான் பட்டது.

"அநபாயன். இன்னும் எத்தனை நாள்தான் இப்படியே பயந்து ஒளிந்து அலைந்து திரிவது."

இவ்விதம் கேட்ட சாரதாவைப் பார்க்கப் பாவமாயிருந்தது.

"சாரதா. விடுதலைப் போரில் ஆண்கள், பெண்களுட்படக் குதிக்க வேண்டிய காலம் தவிர்க்க முடியாதபடி ஏற்பட்டு விட்டது. விடுதலைப் போராளிகளிற்கு உறுதுணையாக மக்கள் யாவருமே தங்களால் இயன்ற வகையில் பங்களிப்புச் செய்ய வேண்டிய வேளை இது. சாரதா. உனக்கு நான் ஒன்று சொல்கிறேன். வெகு விரைவிலேயே உன் அக்காவின் வழியில் செல்வதற்கு நான் முடிவு செய்து விட்டேன்."

அநபாயனை வியப்புடன் நோக்கினாள் சாரதா.

"ஆமாம் சாரதா. என்னைப் பொறுத்தவரையில் நானொரு சாதாரண ஆசாபாசங்களைக் கொண்ட சாதாரண மனிதனே. ஆனால் நாளிற்கு நாள் வளர்ந்து வரும் சிங்கள இராணுவத்தின் அடக்குமுறைக் கெதிராகப் போரிடாது போனால். நான் பிறந்து வளர்ந்த இந்த மண்ணிற்குச் செய்யவேண்டிய பங்களிப்பினின்றும் தவறியவனாவேன். ஒவ்வொரு மனிதனிற்கும் அவன் பிறக்கும் மண்ணுடனானதொரு கடமை இருக்கவே செய்கின்றது. அவனது வாழ்வு அம்மண்ணில் நிலவிடும் சூழ்நிலைகளினாலேயே நிர்ணயிக்கப் படுகின்றது. அவன் தாயின் முகத்தில் மகிழ்ச்சியினைக் காண வேண்டுமானால் தாய்க்குத் தாயான அவன் பிறந்து தவழ்ந்த மண்ணில் மகிழ்ச்சி நிலவவேண்டும். சாரதா. "எந்த மண்ணில் அநீதியும், அக்கிரமும் தாண்டவமாடுகின்றதோ, எந்த மண்ணில் பொய்மை மலிந்து கிடக்கின்றதோ, எந்த மண்ணில் போற்றிட வேண்டிய பெண்மை புழுதியிலே புரண்டு கிடக்கின்றதோ, அம் மண்ணில் அமைதியும், இன்பமும் நிலவுவதில்லை. குடும்ப உறவுகள் குலைந்து விடுகின்றன. அம்மண்ணின் மைந்தர்களின் “விழிப்பினாலேயே விடுதலைப் போரினாலேயே அங்கு நீதி நிலை நிறுத்தப் படுகின்றது.’ என்று எனக்குப் பிடித்த பிரபல நாவலாசிரியர் நந்தி தேவன் புனிதப் பயணம் என்ற நாவலில் கூறியிருப்பது தான் எத்துனை உண்மையானது."

இவ்விதம் அநபாயன் கூறிக்கொண்டிருக்கையில் நடராஜா வாத்தியார் வந்து சேர்ந்தார். நீண்ட வற்புறுத்தல், வாதங்களின் பின்னால் அநபாயன் நடராஜா வாத்தியாரை தன்பக்கம் இழுப்பதில் வெற்றி கண்டான். அன்றிலிருந்து நடராஜா வாத்தியாரும், சாரதாவும், பார்த்திபனும் அநபாயனின் வீட்டிலேயே தங்கத் தொடங்கினார். மைவிழி, தேன் மொழிக்கும் மறுநாளே இவ்விடயம் அறிவிக்கப்பட்டது. அநபாயன் எச்சரித்தது எவ்வளவு உண்மை என்பதனை, மூன்றாம் நாளிரவு நடந்த சம்பவங்களே விளக்கி நின்றன.

## அத்தியாயம் ஒன்பது: சாமியாரின் சுயரூபம்.

மேற்கு அந்தியின் சிவப்பில் குளித்துக் கிடந்தது. இரத்தச் சிவப்பில் புதைந்து கிடந்த சூரியனும், தொலைவில் நிழல்களென மறையும் முகில்களும், பறவைகளும். மெல்லிய தென்றலும்...... கனத்துக் கொதித்துக்கிடக்கும் நெஞ்சம் ஒரு கணமாவது அமைதியடைவதுண்டென்றால் இத்தகைய ஒரு சில பொழுதுகளில்தானே.

வழக்கம்போல் அந்தத் தனிமையில், அந்த மணற் குன்றுப் பிரதேசத்தில் கவிந்து கிடந்த மௌனத்தில் மூழ்கிக் கிடந்தான் அநபாயன். அவன் எச்சரித்தது உண்மையாகவே நடந்து விட்டது. கமலா டீச்சரின் வீடு ஓரிரவு இராணுவத்தினரால் எரித்துக் குலைக்கப்பட்டுவிட்டது. அந்த வெறியர்களின் அட்டகாசத்திற்கு அருகிலிருந்த குடிசையொன்றில் வாழ்ந்து கொண்டிருந்த ஏழைக் குடும்பமொன்றும் பலியாகி விட்டது. அக்குடிசையிலிருந்த கர்ப்பிணிப் பெண் லலிதா படுபயங்கரமாக கணவன், குழைந்தைகள், பெற்றார் முன்னிலையில் கற்பழிக்கப் பட்டதோடு மட்டுமல்ல அவளது கணவன் மோகனும் சுட்டுக் கொல்லப்பட்டான். நாளிற்குநாள் சிங்கள இராணுவத்தினரின் அக்கிரமங்களும் புதிய பரிமாணங்களைப் பெற்றுக் கொண்டிருந்த அதேசமயம், இந்தியாவுடனான சிறிலங்காவின் உறவுகளும் நாளிற்கு நாள் மோசமாகிக் கொண்டேயிருந்தன. தமிழ் நாட்டில் விடுதலைப் போராளிகள் பயிற்சி பெறுவதாக சிறிலங்கா குற்றம் சாட்டுவதும், இந்தியா மறுப்பதுமாகயிருக்கையில். சிறிலங்காவிலேயே பிக்குகளுடன் சேர்ந்த இனவெறி பிடித்த அரசோ தமிழ் மக்கள் மீதான கொடுங்கோன்மையினைக் கட்டவிழ்த்து விட்டிருந்தது.

'ஆகா. அந்தியின் சிவப்பிலும் ஒரு தத்துவமே தெரிகிறது"

சிந்தனையினின்றும் நீங்கியவனாக அநபாயன் திரும்பினான்; எதிரில் சாமியார் நின்றிருந்தார்.

"இரவு எனும் கொடுங்கோலன், பகலைக் குற்றிக் குதறியதன் விளைவோ இந்தச் சிவப்பு.' என்றபடியே அருகிலமர்ந்த சாமியாரையே நோக்கினான் அநபாயன்.

"இவ்வுலகில் வாழ்வே ஒரு போராட்டம்தான். ஒவ்வொரு உயிருமே தனது வாழ்விற்காகப் போராடிக் கொண்டு தானிருக்கின்றது. போராட்டமென்பது இயற்கையில் இயல்பாக, நியதியாகவே உள்ளது."

மேலும் தொடர்ந்தார்:

"இயற்கையின் முரண்பாடுகளும், போராட்டங்களுமே வரலாற்றை வழி நடாத்திச் செல்கின்றன. ஆதியில் மனிதனின் அகவுலகோ இருண்டு கிடந்தது; அறியாமை அங்கே குடி கொண்டிருந்தது. அவன் தன் அறியாமையின் விளைவாக, புற உலகில் நிலவிய முரண்பாடுகளைப் பிழையாகக் கையாண்டதன் விளைவோ, பிரச்சினைகளைச் சிக்கலாக்கியது. அவனது அறிவு வளர வளர, முரண்பாடுகளை அவன் கையாண்ட விதம், பழைய முரண்பாடுகள் இருந்த இடத்தில் புதிய முரண்பாடுகளைக் குடியமர்த்தின. இத்தகைய புதிய முரண்பாடுகளை அவன் தீர்க்கையில், மேலும் சில முரண்பாடுகள் உருவாகின."

இவ்விடத்தில் அநபாயன் இடை மறித்தான். "ஐயா! முரண்பாடு முரண்பாடு என்கின்றீர்களே. அதென்ன முரண்பாடு. எவை எவற்றிற்கிடையிலெல்லாம் முரண்பாடு. விளக்குவீர்களா”

இதற்குச் சற்று நேரம் அமைதியாயிருந்து விட்டு சாமியார் தொடர்ந்தார்.

"தம்பி மனிதனின் அகவுலகை எடுத்துக் கொள்வோம். அவன் மனதிலோ நல்ல உணர்வுகளுமுள்ளன; அதே சமயம் கெட்ட உணர்வுகளுமுள்ளன. இவையிரண்டும் முரண்பட்ட உணர்வுகளல்லவா. இவைதான் அகவுலக முரண்பாடுகள். இம்முரண்பாடுகளை எவ்வகையில் கையாளுகின்றா னென்பதில்தான் அவன் வாழ்வு ஒன்றில் சிறக்கிறது; அல்லது சிறுக்கிறது. மனித உடலை எடுத்துக் கொள்வோம்; பிராண வாயுவை உள்ளுக்கெடுத்து, வெளியில் விடுதல் என்ற இரு முரண்பட்ட செயல்கள்தான்; உணவை உள்வாங்குதல்; கழிவை வெளிவிடுதல் என்னுமிரு முரண்பட்ட செயல்கள்தான்; வாழ்வை வழி நடாத்துகின்றன. இவைதான் உடல் வகைப்பட்ட முரண்பாடுகள். இதனைப் போலவே தான் மானுட சமுதாயமும் முரண்பாடுகளால் பிளவுண்டு கிடக்கின்றது. செல்வந்த நாடுகள், வறிய நாடுகள் இடைப்பட்டவை என்று உலகம் முரண்பட்டுக் கிடக்கின்றது. ஏழை, பணக்காரன்; முதலாளி; தொழிலாளி; இனம், மதம், மொழி, குலம், கோத்திரமென்று சமுதாயமும் பிளவுண்டு போய்க் கிடக்கின்றது."

"ஆக முரண்பாடுகள் என்பவை தவிர்க்க முடியாதபடி என்றுமே இருந்து வருமென்கின்றீர்கள். அப்படித்தானே அடிகளே" இவ்விதம் கேட்ட அநபாயனிற்கு சாமியார் இவ்விதம் பதிலளித்தார்.

"ஆமாம் தம்பி 'பழையன கழிந்து புதியன புகுவது' இயற்கைதானே. பழைய முரண்பாடுகளிருக்குமிடத்தில் புதிய முரண்பாடுகள் வருவதும் இயற்கையே. நான் முன்பு கூறியது போல், மனிதன் அறியாமையால் இம்முரண்பாடுகளை பகை முரண்பாடுகளாக்கிச் சிக்கலாக்கி விட்டு விட்டு, பின்னால் சீராக்க முயல்கிறான். ஏன் இலங்கையை எடுத்துக் கொள்வோம். 1948ற்கு முன்னாலும் தமிழர்கள், சிங்களவர்கள், முஸ்லீம்களிற்கிடையில் முரண்பாடுகள் நிலவத்தான் செய்தன. ஏழை, பணக்காரன், சாதி, சமயமென்று சமுதாயம் முரண்பட்டுத் தானிருந்தது. அந்நிய ஆட்சியில் அடிமைப் பட்டுக்கிடந்த சமூகத்தில், அந்நியர் சுதேசிகள் என்ற முரண்பாடே முக்கியமாக நிலவியது. ஆனால் 1948ற்குப் பிறகோ தமிழர் சிங்களவர்க்கிடையிலான முரண்பாடுகள் கூர்மையடைந்து வந்தன. பதவிகளிற்காக சிங்கள, தமிழ் தலைவர்கள் இம்முரண்பாடுகளைக் கூர்மையாக்கியதன் விளைவே இன்றைய விடுதலைப் போர். தமிழர்களைப் பொறுத்த வரையில் தங்களிற்கிடையில் நிலவும் முரண்பாடுகளைச் சீராக்குவதற்காகவும், சிங்கள தமிழர்களிற்கிடையேயுள்ள முரண்பாடுகளைச் சீராக்கு வதற்காகவுமே போராடுகின்றார்கள். சிங்களத் தலைவர்களோவெனில் தங்களிற்கிடையில் உள்ள முரண்பாடுகள் முற்றி வெடிப்பதைத் தவிர்ப்பதற்காகத் தமிழ் சிங்களவர்க்கிடையேயான முரண்பாடுகளைத் தூண்டி விட்டுக் கவனத்தைத் திசை திருப்புகின்றார்கள்."

இச்சமயம் ஜீப்பொன்று விரைந்துவரும் சத்தம் கேட்கவே சாமியார் பேச்சை நிறுத்திவிட்டு, அமைதியாக தோளில் மாட்டியிருந்த பையினை எடுத்து அருகில் வைத்தபடி எழுவதற்கு ஆயத்தமாகி நின்றார்.

விரைந்து வந்த ஜீப் மணற் குன்றிற்கருகே சடாரென நின்றதும் அதிலிருந்து நான்கு ராணுவத்தினர் பாய்ந்து இறங்கினர்.

இறங்கியவர்களின் பார்வை இவர்கள் பக்கம் திரும்பியது. அடக்கி ஒடுக்கு முறைகளிற்கெதிராகப் போராடுவதற்கு வாய்ப்பு கிட்டாமலேயே, மண்ணிற்கான கடமையினைச் செய்யாமலேயே வாழ்வு முடிந்து விடப்போகின்றதேயென்ற உணர்வில் சப்மெஷின் கண்களுடன் வேட்டை நாய்கள் என ஓடி வந்த இராணுவத்தினரையே பார்த்தபடி அசையாமல் அநபாயன் நின்றிருந்தான்.

அடுத்த சில கணங்களில் அங்கு நடந்தவை. உண்மையிலேயே அநபாயனை அதிர்ச்சியும் ஆச்சர்யமும் ஒருங்கே அடைய வைத்தன. மின்னல்வேகம் என்பார்களே அவ்விதம் காரியங்கள் நடந்தன. “மெஷின் கன்"னின் வேட்டுக்களைத் தொடர்ந்து இராணுவத்தினர் நால்வரும் இரத்த வெள்ளத்தில் மிதந்து கிடந்தார்கள். காரியத்தை கச்சிதமாகவே முடித்தபடி சாமியார் தனது 'சப் மெஷின் கன்னை பழையபடி தோற்பைக்குள் வைத்தவாறே, அநபாயன் பக்கம் திரும்பி மெல்லியதொரு இளநகையைத் தவழவிட்டார்.

## அத்தியாயம் பத்து: மண்ணின் குரல்!

இரத்த வெள்ளத்தில் மிதந்துகிடந்த இராணுவத்தினரையே பார்த்தபடி திக்பிரமை பிடித்தவன் போலிருந்த அநபாயனைப் பிடித்து உலுக்கிய சாமியார், "தம்பி சும்மா நிற்பதற்கு நேரம் இதுவல்ல. உடனடியாக ஊரவர்க்கு எச்சரித்திட வேண்டும். அந்தப் பேய்கள் வந்து ஊரையே எரிக்கப் போகின்றார்கள்." என்றவர், ராணுவத்தினரின் சப் மெஷின் கன்களைத் தூக்கி ஜிப்பில் போட்டவர் தானும் பாய்ந்தேறினார்.

"சாமியார்! நானும் உங்களுடனே வருகின்றேன்" என்றபடியே அநபாயனும் ஜீப்பினுள் பாய்ந்து ஏறிக் கொண்டான். ஜீப்பிலே சென்று ஊரவர்களை எச்சரித்தார்கள்.

செல்லம்மாவிடமும் சாரதாவிடமும் அநபாயன் விடைபெற்றுக் கொண்டு "சாமியாருடனேயே அநபாயனும்  ஜீப்பில் ஏறிக்கொண்டான். உணர்ச்சிப் போராட்டங்களிற்கு முக்கியத்துவம் கொடுக்கும் கணங்களிற்கு திகில் படர்ந்த சூழ்நிலை இடம் தரவில்லை.

சாமியாரைப் பொறுத்தவரையில் இராணுவத்தினரைக் கொன்றதில் அவ்வளவு விருப்பமில்லை; ஆயினும் அவரால் ஒன்றும் செய்ய முடியாது சுடுவதைத் தவிர, விட்டிருந்தால் அவர்களிருவரையும் அவர்கள் முடித்திருப்பார்கள்.

"சாமியாரே! இப்படி செய்தாலென்ன..” என்ற அநபாயனை கேள்விக் குறியுடன் நோக்கினார் சாமியார்.

"எப்படியும் இக்கிராமத்திற்கு இராணுவத்தினர் வருவதற்கு நேரமெடுக்கும். அதற்கிடையில் இறந்த இராணுவத்தினரை எங்காவது ஒதுக்குப்புறமான இடத்தில் கொண்டு போய்ப் புதைத்துவிட்டாலென்ன."

"அதுவும் நல்ல யோசனைதான்." என்றபடியே சாமியார் ஜீப்பை மீண்டும் மணற் குன்றருகே திருப்பினார்; இரத்த வெள்ளத்தில் கிடந்த இராணுவத்தினரைத் தூக்கி ஜீப்பினுள் போட்டபடியே, மணலைக் கொண்டு பரவியிருந்த இரத்தக் கறைகளை மறைத்தார்கள். அதற்கு மேல் செடி, கொடிகளைப் பிடுங்கிப் பரப்பினார்கள்.

மறுகணம், மின்னல் வேகத்தில் ஜீப் அக்கிராமத்தை விட்டு விரைந்தது.

இரண்டு நாட்களின் பின்னர், மனித நடமாட்ட மெதுவுமற்ற கடற்கரைப் பகுதியொன்றில் அநாதரவான நிலையில் வெறும் ஜீப் மட்டும் கண்டு பிடிக்கப்பட்டது. சிறிலங்கா வானொலியோ "வடபகுதிப் பயங்கரவாதிகள் நான்கு இராணுவத்தினரைக் கடத்திக் கொண்டு, இந்தியாவுக்குத் தப்பி விட்டதாக பாதுகாப்புப் படைகள் ஐயுறுவதாக" அடிக்கொரு தரம் அலறியது.

"ஐயோடியம்மா. இப்படி அவன் என்ர வயித்திலை குண்டைப் போட்டு விட்டானேயடியம்மா." என்று அடிக்கொரு தரம் புலம்பியபடியிருந்த செல்லம்மாவைப் பார்க்கையில் சாரதாவிற்குப் பாவமாகவிருந்தது.

"அம்மா கவலைப்படாதீர்கள். உங்கள் மகனை நினைத்து நீங்கள் பெருமைப்பட வேண்டும்." என்று அவளால் ஆறுதல் கூற முடிந்த போதும் உள்ளூர அவளும் பிரிவுத் துயரால் வதங்கிக் கொண்டுதாணிருந்தாள். மீண்டும் இனி என்று அவனைப் பார்ப்பேனோ"

என்ற நினைவே அவள் இதயத்தைக் குத்திக் குதறி நோகடித்தது. நடராஜா வாத்தியாரோ வழக்கம் போல், எதிலும் பற்றற்றவராக வெறித்த பார்வையுடன் வளைய வந்து கொண்டிருந்தார்.

ஆனால் அதே சமயம் அநபாயனோ. புதியதோர் உலகினப் படைப்பதற்கான புனிதப் போரினில் தன்னை முழுமையாக அர்ப்பணித்து விட்டிருந்தான். சாமியார் வேறு யாருமல்லர், ஈசுவரனே, கோடானு கோடி உலகங்களைக் கொண்டதான பிரபஞ்சத்தின் எங்கோ ஒரு சிறு மூலையில் அணுத்துகளென சுழன்று கொண்டிருக்கும் இந்தப் புவியுலகோ வினாடிக்கு வினாடி போர்களாலும் இரத்தக் களரிகளாலும் வெடித்துக் கொண்டு தானிருக்கின்றது. அன்று தொட்டு இன்று வரை அதர்மத்திற்கும், தர்மத்திற்குமிடையிலான மோதல்கள் வெவ்வேறு கால கட்டங்களில் வெவ்வேறு விதமான பரிமாணங்களில் வெடித்துக் கொண்டிருந்தன. அடக்கு முறைகளும், ஒடுக்கு முறைகளும், வர்க்கச் சிதறல்களும். மனிதனே மனிதனை அழித்துக் கொண்டுதாணிருக்கின்றான். அதர்மச் சக்கரத்துள் உலகே அழிந்து விடுமோ என்று கூட அச்சம் படும்படியாக முரண்பாடுகள் முற்றி வெடித்த வண்ணமுள்ளன. ஆனால் தர்மத்தின் கரங்கள் சோர்ந்ததாக, தோற்றதாக வரலாறேயில்லை.

அதோ பாருங்கள். மத்திய கிழக்கு நாடுகளில், எல்சல்வடோர்களில், தமிழீழத்தினில். உலகின் நாலா பக்கங்களிலுமே, அடக்கு, ஒடுக்கு முறைகளிற்கெதிராக ஒரு மக்கள் கூட்டம் தர்மத்திற்கான வேள்வித் தீயினில் குதித்துப் போராடிக் கொண்டிருப்பதை. வறட்டு வேதாந்தத்தினுள்ளும், அடிமைத்தளைகளிற்குள்ளும், அறியாமையினுள் மாண்டிருக்கும் மானுடத்தை புத்துயிர்ப்படையைச் செய்வதற்காக, நடுக்கும் குளிரினுள், அர்த்த ராத்திரிகளில், கொடிய வனாந்தரங்களில், குகைகளில், மலைச் சாரல்களில், காடுகளில், ஊண் உறக்கமின்றி, இரவு பகல்களாக, ஏற்றத் தாழ்வுகளால், நாற்றமெடுத்துச் சீழ்பிடித்துச் சிதைந்து கிடக்கும் சமுதாயத்தினைச் சீர்திருத்துவதற்காக அவர்கள் ஜீவமரணப் போராட்டம் நடத்திக் கொண்டிருக்கின்றார்கள். தாம் பிறந்த மண்ணில், தாண்டவமாடிடும் அநீதியினை, அக்கிரமத்தினை அழித்தொழிப்பதற்காக, மலிந்து கிடக்கும் பொய்மையினை ஒழித்திடுவதற்காக, புழுதியில் புரண்டு கிடக்கும் பெண்மையின் புனிதத்தினைப் பேணுவதற்காக, சிதைந்துவிட்ட குடும்ப உறவுகளைச் சீராக்குவதற்காக, இழந்துவிட்ட அமைதியையும் இன்பத்தினையும் மீண்டும் நிலை நிறுத்துவதற்காக, மண்ணுடனான தமது கடமையினைச் செய்வதற்கான புனிதப் போரினில் அவர்கள் ஈடுபட்டிருக்கின்றார்கள். இந்த மண்ணின் மைந்தர்கள் நடத்தும் போராட்டம் இருக்கின்றதே. அது என்றுமே தோற்றுவிடுவதில்லை; இவர்கள் இறந்து விடலாம்; இவர்கள் ஏற்றி வைத்த இலட்சியச்சுடர்கள் அணைந்து விடுவதில்லை; விதைத்த தர்மப் பயிர்கள் மடிந்து விடுவதில்லை; இவர்களது உடல்கள் இம்மண்ணுடன் கலந்து விடுகையில். இம் மண்ணில் வீசும் தென்றலும் "புரட்சிப் பண் பாடி நிற்கும்; துளிர்க்கும் புற்களும் "போர்ப்' பண்ணிசைத்து விடும்; மலையருவிகள், குன்றுகள். இங்கெல்லாம் இம் மண்ணின் குரல் கேட்கின்றதே. உங்களிற்கு அவை புரிகின்றதா? "புரட்சிகள் வெடிக்காமல் புதுயுகங்கள் பிறப்பதில்லை; போர்ப்பறைகள் முழங்காமல் தார்மீகம் செழிப்பதில்லை."

ஆமாம்! என்று இம்மண்ணில் அநீதியும், அக்கிரமும் அழிந்தொழிந்து விடுகின்றதோ, பொய்மை உருக்குலைந்து போகின்றதோ, பெண்மை போற்றிடப்படுகின்றதோ, குடும்ப உறவுகள் சீர்பெற்று விடுகின்றனவோ, அன்று வரை இம்மண்ணின் குரலும் ஒலித்துக் கொண்டுதானிருக்கும்.

"எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி

இருந்ததும் இந்நாடே! அதன்

முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே! அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே! இதை
வந்தனை கூறி மனத்தில் இருத்தி
என் வாயுற வாழ்த்தேனோ." - பாரதியார் -

**- முற்றும் -**

# இதுவரை வெளியான வ.ந.கிரிதரன் நூல்கள்

1. மண்ணின் குரல் (நாவல், கவிதை, கட்டுரைத் தொகுப்பு),
2. எழுக அதி மானுடா! (கவிதைத்தொகுப்பு),
3. அமெரிக்கா (நாவல், சிறுகதைகளின் தொகுப்பு),
4. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (ஆய்வு)
5. மண்ணின் குரல் ( நாவல்களின் தொகுப்பு) ,
6. குடிவரவாளன் (நாவல்) ,
7.. அமெரிக்கா (நாவல், திருத்திய இரண்டாவது பதிப்பு.)
8. கட்டடக்கா(கூ)ட்டு முயல்கள் (சிறுகதைத்தொகுப்பு) ,
9> வ.ந.கிரிதரன் கட்டுரைகள் ,
10. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல் (கவிதைத்தொகுப்பு) ,
11. நவீன விக்கிரமாதித்தன் (நாவல்)

நல்லூர் ராஜதானி நகர அமைப்பு ஆய்வு நூல் மற்றும் இவரது சிறுகதைகள் சிங்கள மொழிக்கு எழுத்தாளர் ஜி.ஜி.சரத் ஆனந்தவினால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவரது படைப்புகள் பல அமேசன் - கிண்டில் தளத்தில் மின்னூல்களாகக் கிடைக்கின்றன.

கணையாழி (1995 - 2000 தொகுப்பு, ஞானம் சஞ்சிகையின் ' ஈழத்துப்புலம்பெயர் இலக்கியத்தொகுப்பு', ' பனியும் பனையும்' தொகுப்பு , அமரர் வெங்கட் சாமிநாதன் பற்றிய வாதங்களும், விவாதங்களும் தொகுப்பு ,'வடக்கு வாசல் 'சஞ்சிகையின் இலக்கிய மலர், ஆழி பப்ளிஷர்ஸ் வெளியிட்ட ஆண்டு 'தமிழ்க்கொடி' மலர் ஆகியவற்றில் இவரது படைப்புகள் இடம் பெற்றுள்ளன. எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளையும் ஆழி பப்ளிஷர்ஸும் இணைந்து நடத்திய அமரர் சுஜாதா அறிவியல் புனைகதைப் போட்டியில் வட அமெரிக்காவுக்கான விருதினைப் பெற்ற அறிவியற் சிறுகதை 'நான் அவனில்லை'. இச்சிறுகதை ஆழி பதிப்பகம் வெளியிட்ட ‘சுஜாதா நினைவுப் புனைவு 2009’ , அறிவியற் புனைகதைத்தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளது. விகடனின் பவளவிழா ஆண்டில் இவரது 'பல்லிக்கூடம்' முத்திரைக் கதையாக வெளியானது.

## வெளியான அமேசன் - கிண்டில் மின்னூல்கள். இவை பதிவுகள்.காம் வெளியீடுகள்.

1. வ.ந.கிரிதரன் பாடல்கள்
2. வ.ந.கிரிதரனின் அணிந்துரைகள்
3. அமெரிக்கா!: அமெரிக்கத் தடுப்பு முகாம் அனுபவம்!
4. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி ஒன்று)
5. வ.ந.கிரிதரனின் 'கணையாழி'க் கட்டுரைகள்
6. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல்!: வ.ந.கிரிதரனின் தமிழ்க் கவிதைத் தொகுப்பு!
7. அருச்சுனனின் தேடலும் அகலிகையின் காதலும் (நாவல்)
8. அண்டவெளி ஆய்வுக்கு அடிகோலும் தத்துவங்கள்: வ.ந.கிரிதரனின் அறிவியற் கட்டுரைகள், சிறுகதைகள்
9. நவீன கட்டடக்கலைச் சிந்தனைகள்!
10.வன்னி மண்: - என் பால்யத்தின் பிரதிபலிப்பு. (நாவல்)
11. பால்ய காலத்துச் சிநேகிதி! (நாவல்)
12. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (திருத்திய இரண்டாம் பதிப்பு)
13.குடிவரவாளன்: நியூயோர்க் மாநகரத் தமிழ் அகதி அனுபவம்! (நாவல்)
14. மண்ணின் குரல்: - கனடாவில் வெளியான முதலாவது தமிழ் நாவல். - (நாவல்)
15. கணங்களும் குணங்களும் (நாவல்)
16. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி இரண்டு)
17. இன்று புதிதாய்ப் பிறந்தேன் (வ.ந.கிரிதரன் பாடல்கள் தொகுப்பு 2
18. என்னை ஆட்கொண்ட மகாகவி (மகாகவி பாரதியார் பற்றிய கட்டுரைகள்)
19. அழியாத கோலங்கள் (தொகுப்பு ஒன்று)
20. அழியாத கோலங்கள் ( தொகுப்பு இரண்டு)

# ஆங்கில நூல்கள் (மின்னூல்களாக) - மொழிபெயர்த்தவர் - லதா ராமகிருஷ்ணன்.

1. An Immigrant  (Novel)
2. America (Novel)
3. Nallur Rajadhani City Layout

# வ.ந.கிரிதரன்



தற்போது கனடாவில் வாழ்ந்து வரும் எழுத்தாளர் வ.ந.கிரிதரன் இலங்கையைச் சேர்ந்த தமிழ் எழுத்தாளர். வவுனியா மகாவித்தியாலயம், யாழ் இந்துக்கல்லூரி ஆகிய பாடசாலைகளில் கல்வி கற்ற இவர் , மொறட்டுவைப் பல்கலைக்கழகத்தின் கட்டடக்கலைப் பட்டதாரி. "டொராண்டோ" சென்டனியல் கல்லூரியில் இலத்திரனியற் பொறியியல் துறையில் பட்டம் , தகவற் தொழில் நுட்பம் நுட்பத்துறையில் பல்வேறு கல்வித் தகைமைகளைப் பெற்றவர். இலங்கையிலிருந்த காலத்தில் தன் எழுத்துலக வாழ்வினை ஆரம்பித்த புகலிடத்தில் தொடர்ந்து எழுதி வருகின்றார். பதிவுகள் என்னும் இணைய இதழினை 2000 ஆம் ஆண்டிலிருந்து ஆசிரியராகவிருந்து நடாத்தி வருகின்றார்.

இவரது படைப்புகள் இலங்கை, தமிழகம் மற்றும் புகலிடத்தமிழர்கள் வெளியிட்ட சஞ்சிகைகள், பத்திரிகைகளில் வெளியாகியுள்ளன. தமிழக ஆய்வரங்குகளில் இவரது புகலிடப்புனைகதைகளைப் பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. தமிழகப்பல்கலைக்கழகங்களில் இவரது படைப்புகளைப்பற்றி முனைவர் மற்றும், முதுகலைத் தத்துவம் கற்கை நெறிகளுக்காக மாணவர்கள் ஆய்வுகள் செய்திருக்கின்றார்கள். 'பொந்துப்பறவை'கள் என்னும் சிறுகதை சிங்கப்பூர் கல்வி அமைச்சினால் தமிழ் மாணவர்களுக்கான பாடத்திட்டமொன்றில் உள்ளடக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. 'அமெரிக்கா' அமெரிக்கன் கல்லூரியின் (தமிழ்நாடு) பாடத்திட்டத்திலுள்ளது.

ஆனந்த விகடனின் பவள விழாப்போட்டி, எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளை மற்றும் ஆழி பப்ளிஷர்ஸ் இணைந்து நடாத்திய உலக அளவிலான அறிவியற் சிறுகதைப்போட்டி ஆகியவற்றில் பரிசுகளைப்பெற்றுள்ளன. கனடாத் தமிழ் இலக்கியத் தோட்டத்தின் இலக்கியச் சாதனைக்கான இயல் விருது 2022 பெற்றவர்.